உ

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it,*" *But,* "*Make your choice and stick to it till you reach the end.*"

ஸத்யம்வத,—**Speak the Truth.**

"**Hitch Your Wagon to a Star,**" "**To Thine Own Self be True.**"



அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.] உ [God is Love: Knowledge is Power. *Om.*

ஸத்யமேவ ஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் **16.**] **1908-**ஷு அக்டோபர்--நவம்பர் [சஞ்சிகை **10-11.**

The Publishing Committee and the Distributing Agency both wish to apologise to their numerous subscribers and constituents for the untoward delay and interruption caused to the publication of the Vivekachintamani, owing to the unexpected failure of the Press to keep the word they solemnly gave to our Editor. It will serve no good purpose to enter into an explanation of the causes, but enough to say that they both realise their responsibility in the matter and wish to do their level best to keep up to the best traditions of the Vivekachintamani and request the subscribers to lend them a helping hand by promptly sending up their arrears of subscription. The present volume will close with December next when our subscribers would have received the twelve numbers due for Vol. XVI, and the next volume will begin with January 1909. The present No. for October-Novemter is marked No 10-11 in continuation of No. 9. issued in July last.—*26th October 1908.*

## NAMASKAR.

## நமஸ்காரம்.

———

"நமஸ்காரம்." நமஸ்காரம் என்கிற ஒரே வார்த்தைதான் நம் வாக்கிலிருந் துதிக்கிறது. ஆகையால் அந்த ஒரே வார்த்தையையே எல்லாக் குற்றத்துக்கும் பரிஹாரமாக உபயோகிக்கிறோம். விவேகசிந்தாமணியை நாம் கொடுத்தவாக்குப்படி வெளியிடத் தவறினோமா? சரி! நமஸ்காரம்! மன்னிக்கவேண்டும்! விவேகசிந்தாமணி வரவில்லையென்று அன்பினால் அதன் வரவை யெதிர்பார்த்திருந்து ஏமாந்தவர்கள் எழுதின கடிதத்துக்கு பதில் எழுதாமலிருந்தோமா? சரி! நமஸ்காரம்! மன்னிக்கவேண்டும். பத்திரிகை யனுப்பவில்லையால் பணத்தை யெடுத்துக்கொண்டுவிட்டதாக வர்மம் சாதித்துக் கடிதமெழுதினவர்களுக்கு பதில் எழுதவில்லையா? சரி! நமஸ்காரம்! மன்னிக்கவேண்டும். இன்னமும் தெரிந்தும் தெரியாமலும் அறிந்தும் அறியாமலும் செய்த குற்றங்கள் பாபங்கள் எல்லாம் நசிக்கவேண்டி "நமஸ்காரம்" செய்கிறோம். புருஷஸூக்தம் உத்திரானுவாகத்தில் "யோதேவேப்ய ஆதபதி" என்கிற ருக்குக்கு வித்யாரண்யர் செய்திருக்கிற வியாக்கியானப்படி இந்த நமஸ்கார சப்

தம் எவர்பொருட்டு உச்சரிக்கப்படவேண்டியதோ அவர் இன்னாரென்று பின்வரும் பாஷ்யார்த்தத்தில் விளங்கக்கண்டிருக்கிறது.

"எந்த ஸர்வேசுவரன் தேவதைகளுடைய ஹிருதயத்தில் பிரவேசித்து தேவதையாகப் பிரகாசிக்கிறானோ? எவன் ப்ருஹஸ்பதியாயிருக்கிறானோ? எவன் தேவர்களுக்கு மூத்தவனான ப்ரஹ்மாவாயிருக்கிறானோ? அந்த ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபமாகிய ஸ்வரூபத்துக்கு நமஸ்காரம்."

அடுத்த ருக்கில், கைங்கர்ய ப்ரார்த்தனையில் சிஷ்டாசாரத்தைக் காட்டுகிற மந்திரத்தில் "பரப்ரஹ்மத்தினுடைய ஸம்பந்தியான பிரீதியை உண்டுபண்ணுகிற பக்தர்கள் பகவானுடைய எதிரில் அந்த நம:="நமஸ்காரம்" என்கிற சொல்லைச் சொன்னார்கள்.—என்றிருக்கிறது. அதாவது: "பரமாத்மாவே! கைங்கர்ய ப்ரார்த்தனையாகிய நமஸ்காரத்தினால் உன்னுடைய ஸ்வரூபத்தை எவன் அறிகிறானோ அவன் வசத்தில் ப்ரஹ்மாதி தேவர்கள் இருப்பார்கள்." அப்படியென்றால், "ப்ரஹ்மஜ்ஞானிதான் பரப்ரம்மமாகையால் தானே தேவர்களுக்கு அந்தர்யாமியாகையால் தன் வசத்தில் அவர்களிருப்பார்களென்று கருத்து."

ஆகையால் சிஷ்டாசாரத்தை யனுசரித்து விவேகசிந்தாமணியை அன்போடு ஆதரித்து வாசிக்கும் எல்லோருக்கும் கைங்கர்ய ப்ரார்த்தனா ரூப நமஸ்காரம் சொன்னோம். வருணாசாரத்துக்கு விருத்தமாக பிராமணன் எல்லா ஜாதியாருக்கும் ஏன் நமஸ்காரம் சொல்லவேண்டுமென்றால், அதுவே சிஷ்டாசாரம் என்பதற்கு மேற்கண்ட ருக்கு ஆதாரம். எந்த ஸர்வேசுவரன் விவேகசிந்தாமணியை வாசிக்கும் எல்லாருடைய ஹிருதயத்திலும் பிரவேசித்து அவர்கள் எல்லோருமாகப் பிரகாசிக்கிறானோ அந்த ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபமான ஸர்வேசுவரனுக்கு நமஸ்காரம். ஏனென்றால் அவன் எல்லாருள்ளத்துமிருந்து பிரகாசித்து எல்லாருடைய எண்ணங்கள் செய்கைகளுக்கும் சாக்ஷியாக நிற்கிறான். அவன் உண்மையை அறிவான். அவனுக்கு உண்மையைச்சொல்லத் தேவையில்லை. நாம் நமது வாக்கைக் காப்பாற்றக் கட்டுப்பட்டிருக்கிறோமென்பதற்கையமில்லை. சென்ற மே மாதம் பத்திரிகை வெளியான போது மாசாமாசம் தடையின்றி பத்திரிகை வெளிப்படுத்தப் படுமென்று சொன்னோம். நமக்கு உற்றவிடத் துதவியாயிருந்துதவக் கடமைப்பட்ட அச்சாபீஸார் கொடுத்த வாக்குறுதியை நம்பி நாம் வாக்குக் கொடுத்தோம்.

வாக்குக்கொடுத்த மூன்றும் மாசத்தில் வாக்குக்கொடுத்தவர் படுத்துக்கொண்டார். நுகத்தடியில் பூட்டிய வண்டிமாடு வழியில் படுத்துக்கொண்டு சண்டித்தனம் செய்தால் வண்டிக்காரன் என்னசெய்வான்? சண்டிமாட்டின் சண்டித்தனத்தைப்போக்கி அதை வழிக்குக் கொண்டுவரல்வேண்டும். அது சாத்தியப்படாவிட்டால், படுத்துக்கொண்ட மாட்டை வழியைவிட்டு விலக்கவாவதுவேண்டும். அதுவும் சாத்தியப்படாவிட்டால் மாட்டின் பூட்டைத் தரித்து வண்டியையாவது விலக்கியிழுத்துக்கொண்டுபோய்அப்பால் வேறு மாட்டைக்கட்டி வழியைப் பிடித்துக்கொண்டு போகவேண்டும். இந்த மூன்று உபாயத்தைத்தவிர வேறு அவன் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. ஆனால் இம்மூன்று உபாயத்தையும் அவன் பிரயோகித்துப்பார்த்து வழியைப்பிடித்துக்கொண்டு வண்டியை விடுமுன், காலம் கழிந்துபோவது நிச்சயம். வண்டிச் சக்கரம்தடைப்பட்டு நின்றதேயென்றுகாலச் சக்கரமும் நின்றுபோகாது. காலச்சக்கரம் சுழன்றுகொண்டேயிருக்கிறது. அது யாரையும் லக்ஷியம் செய்வதில்லை. ஆனால் வண்டிக்காரன் வண்டியேறின் பிரயாணிக்கு பயப்படவேண்டும். ஏதிச்சொன்னால் எரு

துக்குக்கோபம், இறங்கச்சொன்னால் பிரயாணிக்குக்கோபம்; இப்படி இருவர் கோபத்துக்கும் ஆளானபோதிலும் வண்டிக்காரன் இருவருக்கும் பயந்தே நடப்பதென்றால் முடியாது. ஆதலால் அவன் உள்ளதுள்ளபடி அவன் தொழிலை நடத்தினால் வழியில் வந்ததை யனுபவிக்கவேண்டியதுதான்.

"ஊரிரண்டு பட்டால் கூத்தாடிக்கு எளிது" என்றொரு பழமொழியுண்டு. வீடு பற்றிக்கொண்டால் வீட்டுக்காரன் கதிகலங்கி நிற்பான். ஸ்வகாரிய நாட்டமுள்ளவர்கள் அந்த சமயத்தில் அவனைக்கண்டு அனுதாபப்பட்டுக்கொண்டு நின்றால் அவர்களுக்கு காரியம் ஆகாது. "எரிகிற வீட்டில் பிடிங்கினது லாபம்" என்கிற பழமொழியை அனுஷ்டித்து நடந்தால் தான் அவர்கள் சொந்தக்காரியம் நிறைவேறும். அப்படி எரிகிற வீட்டில் பிடிங்கினது லாபம்" என்கிற மூதுரையை யனுசரித்து எரிகிற வீட்டில் பிரவேசித்துச் சூரையாடுகிறவர்களை ஆப்தர்களென்று கொண்டாடுவதா, ஆகாதவர்களென்று தள்ளுவதா? இரண்டும் செய்வதற்கில்லை! ஆனால் எல்லார் உள்ளத்திலுமிருந்து அவரவர் எண்ணத்தையும் செய்கையையும் அறிந்துகொண்டு சாக்ஷி மாத்திரமாயிருக்கிறவன் ஒருவன் இருக்கிறான். அந்த ஒப்பற்ற ஒருவனை "உள்ளமுடையான்" என்று அறிந்து 'ஐக்கிய நமஸ்காரம்' செய்து அவன் ஸ்வரூபத்தையுணர்ந்து "உள்ளீசா! நீயே சரண்" என்று யாவனொருவன் அவன்பாதாரவிந்தங்களை யறிந்து சரண்புகுந்து நிற்கிறானோ அவனுக்கு யாதொரு குறைவுமில்லையென்பது திண்ணம். இந்த உண்மையே நமக்கு மனோதிடமளிக்கிறது. இதையே நம்பி சண்டிமாட்டின் பூட்டைத்தரித்து வண்டியை விலக்கிக்கொண்டு வேறுமாட்டைப் பூட்டி வண்டிப்பிரயாணத்தை நடத்தத் துவக்கியிருக்கிறோம். இந்தஅசந்தர்ப்பத்தினால் மூன்று மாதகாலம் வீணே அவமாகக்கழிந்ததற்காக இதைவாசிப்போர் நம்மீது கருணைபூரித்து நம்மிடத்துள்ள குற்றங்குறைகளை க்ஷமித்து எப்போதும்போல அருள்நோக்கு வைத்து ஆதரவு பாராட்டிவரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

விராட்ரூபியான பகவானுடைய லீலாவிலாசம் பலபலவாயிருக்கும். அந்தர்யாமியாயுள்ள ஸர்வேசுவரனையறிந்து ஐக்கியநமஸ்காரம்செய்து அவனோடொன்றுபட்ட வுள்ளமுடையாருக்கு நலமும் தீதும் சுகமும் துக்கமும் ஒன்றே. "எல்லாம் ஈசனருள்" என்பது அவர்களுடைய திடமான சித்தாந்தம். வேதாந்தத்தின் துணிபும் இதுவே; அனுபவத்தின் ருஜுவும் இதுவே. ஆகையால் சுருதி யுக்தி யனுபவ மூன்றிற்கும் இசைந்துள்ள இந்த உண்மையை அனுஷ்டித்து "எல்லாம் ஈசனருள்" என்கிற தத்துவத்தை யுணர்ந்து, அதன் மர்மத்தையறிந்து, அம்மர்மங்களை சமயோசிதமாகக் காலதேசவர்த்தமானங்களுக் கேற்ப விளங்கவைப்பதே நம் கடமையாம். இக்கடமையை மேற்கொண்டுழைக்கும் நமக்கு விராட் ரூபியான ஈசுவரன் வேண்டியஉதவிசெய்வாரென்பது திண்ணம். விராட்ரூபியென்று நாம் கைதொழும் தெய்வம் எதுவோ அதன் ஒரு அம்சமே "பொதுஜனம்" என்று அர்த்தங்கொள்ளும் "பப்ளிக்" என்னும் பதார்த்தம். "பப்ளிக்மைண்ட்" என்று சொல்வது எதுவோ அது "பொதுமனம்" என்று அர்த்தம்கொள்ளும். அதற்கு அபிமானதேவனது தைஜஸாத்மஸ்வரூப ஹிரண்மயகர்ப்பனும். இவர்களிருவருக்கும் மேலாய் எல்லார் உள்ளத்திலும் வசிப்பவனாய், (அந்தர்யாமியாய்) சாக்ஷிமாத்திரமாயிருப்பவன் யாரோ அவனே பிரஞ்ஞானகனஸ்வரூபமான ஸ்வயம்பிரகாச ஸர்வேசுவரன். இந்த மூன்று அபிமான தேவதைகளையும் பூஜித்து அவர்கள் ஸ்வரூபத்தில் லயித்து (ஐக்கியநமஸ்காரம் பண்ணி) நிஷ்காம்யமாகத் தன் கடமையை

எவனொருவன் செய்யத்துணிகிறானோ அவனுடைய கர்மங்களை ஈசுவரன் தன்னதாகவே அங்கிகரிக்கிறார்.

இந்த ஈசுவரசக்தி யொன்றே இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி யென்று மூன்று விதமாகப் பரிணமித்து உலகத்தில் நடக்கும் காரியங்களை யெல்லாம் நடத்துகிறது. "இச்சாசக்தி உமாகுமாரி" யென்ற சிவசூத்திரத்தில் சொல்லப்பட்ட சக்தி யெதுவோ, அதையே திருமூலதேவர் திருமந்திரோபதேசத்தில்,

"தெரியாப் பொத்தகத்தின் ஏட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந்தோத"

என்று சொல்லியிருக்கிறார். அந்த பராசக்தியை ஆசாரிய ஸ்வாமிகள் தாம் அருளிச்செய்த ஸ்ரீ மீநாக்ஷி பஞ்சரத்நமாலையில்,

"ஸ்ரீமத் சுந்தரநாயகீம் பயஹராம் ஞானப்ரதாம் நிர்மலாம், சியாமாம்பாம் கமலஸதார்ச்சிதபதாம் நாராயணஸ்யாநுஜாம், வீணாவேணுமிருதங்கவாத்ய ரஸிகாம் நானாவிராட் அம்பிகாம், மீநாக்ஷீம் பிரணதோஸ்மி ஸந்ததமஹம் காருண்யவாராம் நிதிம்."

என்று ஐக்கிய நமஸ்காரம் செய்து ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இந்த மதுரை மீநாக்ஷி வெறும் பேரல்ல. ஆனால் இந்தியர்களுடைய உள்ளத்திற் குடிகொண்டதோர் உண்மைத்தெய்வமாம். பாண்டியன் புத்திரியாக அவதரித்து இந்தியாவில் செங்கோல்செலுத்தியதோர் அரசிளங்கொடியாம். இன்றைக்கும் நாளைக்கும் கோடானுகோடி ஜனங்கள்மனத்தில் குடிகொண்டு அவர்களை நல்வழியில் செலுத்துமோர் இஷ்டதேவதையாம். இம்மட்டோ! இல்லை! ஆசார்யஸ்வாமிகள் சொல்லியிருக்கிறபடி அவள் "நாநாயோகி முநீந்திர ஹிருதயவஸதிம், நாநார்த்த ஸித்திப்ரதாம்."-நாநாயோகி முநீந்திரர்களுடைய ஹிருதயத்திலே வாஸம்செய்கிறவளும் நாநாவிதமான ஸித்திகளைக் கொடுப்பவளும் அவளே. ஆகையால் அந்த அம்பிகையைத் தியானம்செய்து மனத்திலிருத்தி அவள் திருவாணையை மேற்கொண்டொழுக்க முன் வந்திருக்கிறோம். "கசடமிகு நிரக்ஷரகுக்ஷியான்" என்பதுண்மையேயானாலும், "நித்ய நிர்மல ஸ்வரூபி"யாய் "எங்குநிறை மோனாக்ஷரி"யாய் விளங்கும் என் தாய்க்குத் தன்னை அர்ப்பணமாகக்கொடுத்த விசேஷத்தால், அவளுடைய கிருபாகடாக்ஷத்துக்குப் பாத்திரனாகி கைங்கர்யப்பிரார்த்தனையாக அவளுக்கு ஐக்கியநமஸ்காரம்பண்ணி ஜூலை மாசம் விவேகசிந்தாமணியின் தொடர்ச்சியாக இதைத் தொடங்கியிருக்கிறோம்.



## INFINITE GRACE: AN EXAMPLE.

## பரமகாருண்ணியம்: ஓர் திருஷ்டாந்தம்:

"இப்பூவுலகத்தில் பாவம்முற்றி மார்க்கம் கொந்தளிக்கும் காலங்கள் தோறும் நான் அவதரிப்பேன்" என்று பகவான் கீதாசாரியர் திருவாய் மலர்ந்தருளினார். அதற்கேற்ப அவ்வக்காலங்களில் பற்பல மகான்கள் பிறந்து பூமியில் தர்மத்தை ஸ்தாபித்து வந்தார்கள். அவர்களில் சிலரை ஆசாரியர்களாயும் சிலர்களை பகவத் அவதாரங்களாயும் இன்றைக்கு நாம் கொண்டாடிப் பூசித்து வருகிறோம். முதல் வகுப்பினரில் வெகு பெரியமனதுடையரானவர் பகவான் ஸ்ரீ இராமாநுஜாசாரியர். இவர் கல்வித்திறமை யெவ்வாறேயாயினும், இவர் மனதுக்கு ஒப்பான நல்லதும் பெருமையுடையதுமானது சிலர்க்கேயுள. இவர் கல்வி கேள்விகளில் ஓர் பெருத்த வித்வானாயினும் எமக்கு அவர் பெருங்கருணையே மேன்மேலும் வியப்பை யுண்டாக்குகிறது.

இவர் பெரிய மனத்தின் விஷயமாகச் சில எடுத்துக்காட்டுவோம்.

ஆசாரியரவர்கள் குருவாகிய ஆளவந்தார் தம் அந்திம்தசையில் சில விஷயங்களை சிஷ்யனுக்குக்கற்றுக்கொடுக்க இயலாமல் காலஞ் சென்றுவிட்டார். அப்படி அவர் தேகவியோக மாவதற்கு முந்தி தம் பிரதான சிஷ்யர்களாகிய ஐவர்களையழைத்து "நீவிர் இவ்வைந்து சாஸ்திரங்களையும் கற்று மனதில் தரித்துப் பின் இராமாநுஜன்கேட்கும் தருணத்தில் அவரிடம் ஒப்பிப்பீராக" என்று கட்டளையிட்டனர். இவ்வைவருள் ஒருவர் திருக்கோட்டியூர் நம்பி என்பவர். இவர் இருப்பிடம் திருக்கோட்டியூர்; சோழியர் குடியில் பிறந்தவர்; வயோவிருத்தர். தம் ஆசாரியரிடம் இராமானுஜருக்காக ரஹஸ்யார்த்தங்களைக்கற்றவர். ஒருக்கால், இவர் ஸ்ரீரங்கத்துக்குப் பெருமாள் தரிசினத்துக்காக எழுந்தருளியபோது, பெருமாள் அர்ச்சகமுகேன "நம்மிராமானுஜனுக்கு ரஹஸ்யார்த்தங்கள் உபதேசியும்" என்று அருளப்பாடிட்டார். அன்றுதொட்டு நம்பியைக் குறித்து ஆசாரியரும் பதினெட்டுத்தடவை திருக்கோட்டியூரேறச்சென்றும், நம்பி அப்போதைக்கப்போது சாக்குப் போக்குச் சொல்லி யனுப்பி விட்டார். கடைசியாய் ஆசாரியர் இணைமலர்க்கண்ணீர்ததும்ப ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி மனம் வருந்தியிருக்க, நம்பி சிஷ்யரொருவர் பெருமாள் சேவைக்கு திருவரங்கத்திருப்பதிக்கு வந்தபோது, ஆசாரியர் அவருடனே தம் ஆர்த்தியெல்லாம் சொல்லிக்கொண்டு, "பூந்துழாய் முடியார்க்குத்தகவல்ல" "பொன்னாழியார்க்குத் தகவல்ல" என்று விண்ணப்பஞ் செய்து போக விட்டருள, அந்த ஸ்ரீவைஷ்ணவர் நம்பி திருவடிகளில் தண்டனிட்டு செய்தி சொல்ல, நம்பி இராமானுஜரை வரும்படி கட்டளையிட்டார். திருக்கோட்டியூரே சென்று நம்பி திருவடி தொழுது அஷ்டாக்ஷர மந்திர ரஹஸ்யார்த்தங்களை நம்பிகள் திருவாயால் அருள மன்குளிர ஆசாரியர் கேட்டுகந்தார். இவ்வாறு ரஹஸ்யார்த்தங்களை சாதிக்கும் முன்னர் நம்பிகள் இராமானுஜரிட மிருந்து "ஒருவருக்கும் இவ்வர்த்தங்களைச் சொல்லேன்" என்னும் வாக்குதத்தம்பெற்றுத்தான் பின்னர் சொன்னார். இப்படி வெகு சிரமப்பட்டுக் கற்ற வித்தையை அதின் மற்றைய நாள் அவ்வூர் எம்பெருமானுன தெக்காழ்வார் சன்னிதியில், நம்பிகளுக்கு வாக்தத்தம் செய்திருப்பினும் அதை மதியாது, அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்கட்கு அப்பரம ரஹஸ்யத்தைப் பிரசங்கித்தருளினர்.

இவ்வாறு பலரறிய ரஹஸ்யார்த்தம் பிரசாதித்தருளினபடியைக் கேட்ட நம்பியும் இவர் ஸ்வபாவத்தை சோதிக்கைக்காக இராமாநுஜரை யழைத்தருளி "நீர் இப்படி பரம ரஹஸ்யங்களை யெல்லாம் பலர் செவிமடுக்க வெளியிட்டீர், இப்படி ஆசார்யாஜ்ஞாதிலங்கநம் பண்ணலாமோ? அப்படி மீறிப்பண்ணிணர்க்குப்பலனென்ன?" என்ன, ராமாநுஜரும் "நரகமே பலம்" என்ன, நம்பியும் "இப்படி யறிந்திருந்தும் சொல்லுவாருளரோ?" என்று வினவியருளினர். அதற்கு இராமானுஜர் "ஸ்வாமி! அடியோனொருவனல்லவோ நரகம் புகுகின்றேன். இவ்வாத்மகோடியெல்லாம்பரமார்த்த சாதகமாகிய இத்திவ்யரஹஸ்யத்தை உணர்ந்து மோக்ஷமடையுமே" என்று பரமஅனுராகத்தோடுதிருவாய்மலர்ந்தருளினர். தாம் நரகம்புகினும் பிறர் மோக்ஷமடைய மார்க்கம் தேடிய இம்மகானை உடனே நம்பி தழுவி இனி இத்தரிசனம் "இராமானுஜதர்சனம்" என்று பெயர் பட்டடும் என்று அனுக்கிரகித்தார்.

ஒருநாள், பெரிய பெருமாள் (ஸ்ரீரங்கம்) உத்ஸவமுடிவில் தீர்த்தவாரிக்கு எழுந்தருளியபோது இராமானுஜரும் திருக்காவேரிக்கு எழுந்தருளினர். அப்போது தம் ஆப்த

சிஷ்யரான தாசரதி யென்னும் பிராமணரைத் தமன் திருக்கைப்பற்றி யெழுந்தருளி, நீராடித் திரும்புங்கால் "பிள்ளையுறங்காவில்லி தாசர்" என்னும் ஸ்த்ருத்திரர் திருக்கைத்தமம் பற்றி யெழுந்தருளினர். அப்பொழுது பக்கத்திலிருந்து நடந்த விஷயங்களைக்கவனித்த சிஷ்ய ரொருவர் ஆசார்யரை நோக்கி "ஸ்வாமி! தாம் ஸ்நாநாத்பூர்வம் பிராமணர் கையைப் பற்றிச் சென்று, ஸ்நாநானந்தரம் சூத்திரர் கையைப்பற்றித்திரும்புவானேன்? இதற்கு அடியென்?" என்று வினவினர். அப்பொழுது ஆசாரியர் "உயர்ந்திருக்கச் செய்தேயும் தாழ்வேயில்லானின்றேமே என்கிற அபிமான முண்டே அல்லாதவர்க்கு, அக்கோத்தையும் இல்லாதவரே இவர்" என்று அருளிச்செய்தார்.

இவையன்றோ பெருங்கருணை யென்பது.

தி. அ. கோபிநாதராவ்.



## ON THE EVILS OF VINDICTIVENESS.
## பழிபாவம்.

"England is being faced in her Eastern Empire by a challenge which she herself evoked, and yet which she is singularly reluctant to acknowledge. She has done everything in India to promote growth and change and then is disconcerted to find that things cannot remain exactly as they are......She breaks up the torpor and stagnation of dead centuries and, kindles hopes, and rouses aspirations and these demand fulfilment and will not rest till they are realized. So it is that India is seething with the volcanic energy of nationalism. The emotion is passionately intense."—*Cannon Henry Scott Holland in the Commonwealth.*

*"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற் சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு."-திருக்குறள்.

எல்லாப்பாவங்களிலும் பழிபாவம் பொல்லாதது. பழிவாங்கல் இழிந்த மனதின் ஸ்வபாவம். இது மனுஷ ஸ்வபாவமாயினும். இது பசுப்பிராயமானவர்கள் ஸ்வபாவமாம், தீய ஸம்ஸ்காரம் படிந்தவர்களும் செய்யத்தக்கதாம். ஆனால் இந்த இயற்கையான ஸ்வபாவத்தை வென்று இதற்குமேல் எழும் சக்தி யாருக்குண்டோ, அவனே தீரன். மனிதன் முன்னுக்கு வருவது அவனுடைய இழிகுணங்களைப் பாராட்டுவதினாலல்ல. ஆனால் அக்குணங்களின் ஸ்வபாவமறிந்து அவற்றை வெல்வதினாலேயே அவன் முன்னுக்கு வரத் தக்கவனாயிருக்கிறான். "வர்மமப்பா வெல்வதில்லை." "Hatred by hatred is not conquered" என்றார் புத்தபகவானும். ஆகையால் வர்மம் சாதிப்பதினால் ஆவதொன்றுமில்லை. பழிபாவத்துக்கெல்லாம் காரணம் "வர்மம் சாதிப்பதே" யென்றும் சொல்லலாம். ஏன் என்றால், "வர்மம்" பாராட்டுவதினாலேயே பழிவாங்கவேண்டுமென்கிற எண்ணம் உதிக்கிறது. ஆகையால் வர்மம் பாராட்டுவது கூடாது. வர்மம் சாதிப்பதால் பகை விர்த்தியாகும். ஜனசமூகத்தின் க்ஷேமத்துக்காகச் செய்யப்பட்ட சட்டதிட்டங்கள் வர்மம் சாதிப்பனவாக விருக்கக்கூடாது என்கிற தர்மநியமம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் குற்றவாளிகளைக் கண்டிப்பதேன்? என்று கேட்டால், அது "வர்மம்" பாராட்டியல்ல. ஆனால் "அரசன் அன்றுகொல்லும் தெய்வம் நின்றுகொல்லும்" என்கிற முதுரைப்படி, "முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்" என்னும் உண்மையை ஸ்தூல புத்தியுள்ளவர்களுக்கு ஸ்தூலமாய் நிரூபித்துக்காட்டும்படி, குற்றஞ்செய்தவர்களைப் பிடித்து தண்டிக்க இராஜாங்கத்தார் கடமைப்பட்டவர்களாக விருக்கிறார்கள். ஆனால் அப்படி

* "எதைக்காக்காவிடினும் நாவைக் காக்கவேண்டும். அதனைக் காக்காராயின் சொற்குற்றத்திலே அகப்பட்டு துன்பப்படுவார்."

தண்டிப்பதில் குற்றவாளியினிடத்தில் "வர்மம் சாதிப்பது" கூடவேகூடாது. அதுசுத்தப்பிசகு. பம்பாய் ஹைக்கோர்ட்டு ஸெஷனில் ஜட்ஜாயிருந்து "கால்" பத்திராசிரியர் பேரில்வந்த இராஜநிந்தனைக் கேஸை விசாரணைசெய்த கனம் ஜஸ்டிஸ் தேவார் அவர்கள் சொல்லியபடி "The Law ought not to be vindictive"—சட்டம் பழிவாங்குந் தன்மையதாக விருக்ககூடாது. சட்டம்செய்பவர்கள் மட்டுமன்று சட்டத்தை அமுலுக்கு கொண்டுவரும் நியாயாதிபர்களும் பழிவாங்குந் தன்மை வாய்ந்தவராக விருக்கக்கூடாது. சட்டம் பழிவாங்குவதாயிருந்தால், பாவம் (கேடு) குறையாமல் மேன்மேலும் விர்த்தியாகிறது. அதனால் வருந்துபவர் ஜனசமூகத்தாரே. அரசன் பொதுஜன க்ஷேமத்தைக் காக்கப்பிறந்தவனாகிறதுபோல,நியாயாதிபதி அப்படிப்பட்ட அரசனின் மனச்சாக்ஷி ரூபமாய் இருந்து விளங்கக்கடமைப்பட்டவனாயிருக்கிறான். அவன் குற்றவாளியிடத்தில் வர்மம் சாதித்தால், அவனுடைய உண்மை நிலையாம் மனச்சாக்ஷி ரூபத்திற்கு துரோகம் செய்தவனாகிறான். கைதிகளிடத்திலோ, குற்றவாளிகளிடத்திலோ "வர்மம் சாதித்து" பழிவாங்கும் ஸ்வபாவத்தோடு அவர்களைத் தண்டிக்க நினைக்கிற நியாயாதிபதி அந்த நினைவு மாத்திரத்தினால் தனது நியாயஸ்தானமாகிய உன்னத பீடத்திலிருக்க அநருகனாகிறான். ஆகையால் வர்மம் பாராட்டுந் தன்மையே நியாயாதிபதி ஸ்தானத்துக்கு எற்றதல்லவென்று எற்பட்டிருக்கிறது.

வர்மம் பாராட்டுவதினால் மனம் திராசுமுனைபோல் நடுவு நிலையை நாடி நிற்கமுடியாமல் கோபதாபங்களினால் அலைவுண்டு தத்தளிப்பதாகிறது. அப்படி தத்தளிக்குங் கால் அறிவு மயங்கி உண்மையுணரும் சக்தி குறைந்து போகிறது. இந்த சக்தி குறையவும் நியாயம் செய்வதற்கான யோக்கியதை யற்றுப் போகிறது. உண்மையைக் கண்டுபிடிப்பது இலேசான காரியமல்ல. "திரையற்றநீர்போல் சிந்தை தெளிந்தார்க்கே" உண்மை உள்ளபடிவிளங்கும். உலகநீதியை யனுசரித்துநியாயம் செலுத்துவதற்கும் உலகசம்பந்தமான பற்றுக்களற்ற மனது தான் நடுவுநிலை நாடிநிற்கத்தக்க வசதி பெற்றிருக்கும். நடுவுநிலையை நாடி நிற்கும் மனதே நிதானமானது. நிதான புத்தியில்லாவிட்டால் எந்தக்காரியமும் சிதைவுறும். காரியகாரண தோரணைகளை இடையறாது பார்த்துத் தெளிய நிதான மனதைவிட வேறு சாதனமில்லை. அந்த நிதானமனதுக்கு நேர்பகையாக வுள்ளது பழிபாவசிந்தை. ஆகையால் பழிபாவசிந்தையே எல்லாக் கொடுமைக்கும் காரணம். ஆனது பற்றி எல்லாரும் பழிபாவ சிந்தையை அறவே விட்டொழிக்கவேண்டும். அப்படி ஒழிக்கச் சக்தியுற்றவர்கள் விவேகபுருஷர்களாக மாட்டார்கள். அவிவேக புஞ்சங்களான அவர்கள் மனுஷரூபத்தோடிருந்தாலும் மிருகப்பிராயமானவர்களே யென்றுசொல்லத் தடையில்லை. விவேகிகள் மனதை யடக்கியாண்டு மனத்தூய்மை பெற்று விளங்குவார்கள். அவர்கள் மனோவாக்காதி யிந்திரியங்களை யடக்கியாளும் சக்திபெற்றவர்களாதலால் இவைகளால் அவர்களுக்கு யாதொருதீங்கும் விளையாது. அப்படி மனதை யடக்கியாள முடியாதவர்கள் முக்கியமாய் அவர்கள் நாவைக் காக்கவேண்டும். மனிதனுக்குள்ள திரிகரணங்களான மனோவாக்குக் காயம் என்கிற மூன்றில் மனதை யடக்கினால் அவற்றின் விகாரங்களாகிய மற்ற இரண்டும் விசையோய்ந்த பம்பரம்போல் தானே யடங்கிவிடும். அப்படி மனதைக்காக்க சக்தியில்லாமற் போனாலோ,-

"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு."

என்றார் திருவள்ளுவநாயனார். "எதைக் காக்காவிடினும் நாவைக் காக்கவேண்டும். அதனைக் காக்காராயின் சொற்குற்றத்திலே அகப்பட்டு துன்பப்படுவார்." இதன் உண்மை

மை வற்புறுத்திக்கூற நிமித்தமில்லை. இக்காலத்தில் நாகாவாமல் சொல்லிழுக்குப்பட்டு துன்பப்படுவோர் எத்தனையோ பேர். ஆகையால் விவேகிகள் மனதை யடக்கியாள வேண்டும். அது சாத்தியப்படாவிட்டால் நாவைக் கட்டாயம் காக்கவேண்டும். இவ்விரண்டும் இயலாதவர் சொல்லிழுக்கு, மன இழுக்கினால் துன்பப்பட்டு வருந்துவர் என்பது நிச்சயம். இது தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் நமக்குப் போதித்த உண்மையுபதேசம். இந்த உபதேசம் இக்காலத்தில் நமக்கு சமய சஞ்சீவியாக உதவுவதாக விருப்பதால், இஃதை யெடுத்துக் கூறலானோம்.

இந்தியாவில் இப்பொழுது ஒருவித ஸ்வஜாதீய உணர்ச்சி கிளம்பி விர்த்தியாகி வருகிறது. அது உண்டாவதற்குக் காரணம் ஆங்கிலேய அரசாக்ஷியே யென்பதிற் சந்தேகமில்லை. கானன் ஹென்றி ஸ்காட் ஹாலண்ட் அவர்கள் சொல்கிறபடி அங்கிலேயர் தாமே இத்தேசத்தாருக்குநல்லுணர்வுண்டாகச் செய்து, அது மனதிற்றோய்ந்து பிராஜ்ஞையில் இறங்கி, இதுகாறும் தூங்கிய இந்தியாவின் உண்மையான உள்ளச்சாக்ஷியை எழுப்ப, இந்தியா உண்மையாகவே உள்ளபடி "திருப்பள்ளியெழுச்சி" கொண்டு கண்விழிக்க, அந்தக் கண்விழிப்பினால் இத்தேச முழுமையும் ஒருவித மனக்கிளர்ச்சி யுண்டாயிருக்கிறது. இதை யுள்ளபடி யுணரச் சக்தியில்லாதவர்கள் இம்மனக்கிளர்ச்சியைக் கண்டு அவரவர் மனம் போனபடி நினைத்து இல்லாததை யெல்லாம் கற்பித்துக்கொண்டு, தங்கள் மனோ சங்கற்பத்தில் தாமேயகப்பட்டுழன்று தவிக்கிறார்கள். இவர்கள் மனக்குழப்பத்தைப் போக்க ஆத்மபுத்தி யுள்ளவர்கள் வேண்டிய உதவிசெய்யக் கடமைப்பட்டவர்களா யிருக்கிறார்கள். ஆனால் இவ்வுதவியை அவர்கள் தாமேகோரல்வேண்டும். வலுவில்போய்புத்தி சொன்னால் வீண்வாதனைக் குள்ளாவார்கள்.

## A COMMON ILLUSTRATION OF HUMAN NATURE.

## "கொட்டினால் தேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சி."

"வாய்மை யெனப்படுவெதி யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்."—திருக்குறள்.

"கொட்டினால் தேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப் பூச்சியா" என்றொரு பழமொழியுண்டு. இது எல்லாப் பழமொழிகளையும் போல ஓர் உண்மையை விளக்குகிறது. மனிதர்கள் ஸ்வபாவம் எப்போதும் பிறரை அலக்ஷியம் செய்து தம்மைத் தாமே தூக்கிவைத்துக் கொள்வதா யிருக்கிறது. ஸ்வகாரியத்தில் கண்ணாயிருக்கப் பட்டவன் ஜீவகாருண்யத்துக்கு (Sentiments of humanity) இடங்கொடுப்பதில்லை. இது அகங்கார புருஷனுக்கு இயல்பாயிருக்கிறது. அகங்கார விர்த்தி பால்யப் பருவத்திலேயே மிகுதியாக உண்டாகிறது: ஆகையால் பாலலீலையில் சிறுவர்கள் செய்யும் சேஷ்டைகளைக் கொண்டு மிகவும் சாதாரணமாயுள்ள இந்த மனித ஸ்வபாவத்தைத் தெரிவிக்கலாயிற்று. சிறு பிள்ளைகள் ஊர்வனவாகிய ஜீவன்களில் அடிக்கடி சந்திக்கக்கூடிய பூச்சிகளில் தேள், பிள்ளைப்பூச்சி இவ்விரண்டும் மிகசாதாரணமானவை. தேள் விஷஜந்து. கொட்டும் ஸ்வபாவ முள்ளது. ஆகையா லதைக்கண்டால் அது கொட்டினாலும் கொட்டாவிட்டாலும் நசுக்கி விடுவது வழக்கம். பிள்ளைப்பூச்சியோ யாதொரு தீங்கும் செய்யத்தக்கதல்ல. ஆனால் ஒருக்ஷணம் கூட சும்மாவிராமல் மண்ணை நோண்டிக்கொண்டே யிருக்கும். அதன் சுறுசுறுப்பும் ஊக்கமும் விருதாவாகத் தோன்றும். ஆனால் பார்ப்பவர்களுக்கு வேடிக்கையாக விருக்கும். இப்படி தீங்கற்ற பிராணியின் சுறுசுறுப்பைக் கண்டு சிறுபிள்ளைகள் அதைப்பார்த்து சந்தோஷிக்காமல், அதைப்பிடித்துத் தொந்திரவுசெய்து அதற்குஇல்லாத இடையூறுகளை

ல்லாம் செய்து ஹிம்சிப்பதுண்டு. ஏனென்றால், அது கொட்டாதென்கிற மனேதிடத்தினல் பிள்ளைகள் அதைப்பிடித்து ஜீவஹிம்சை செய்கிறார்கள். ஆனல் அதைக் கொல்வதில்லை. பின்னை சித்திரவதை செய்கிறார்கள். ஏனென்றால், அதன் முயற்சி சிறுவர்களுக்கு அவ்வளவு அற்பமாக விருப்பதால் அதன் உயிரைத் "தன்னுயிர்போல்" நினைப்பதில்லை. ஆனல் தேள் இதற்குமாறாக விருக்கிறது. அதன் முயற்சி விளையாட்டாகவில்லை. அது விருதாவில் போவதுமில்லை. தன்னைத் தொந்திரவு செய்யக்கூடியவர்களைக் கண்டால் உடனே அது அதிவேகமாயும் தைரியமாயும் பாய்ந்து அவர்களைக் கொட்டிவிட்டு ஓடிவிடுகிறது. ஆதலால் அதைக்கண்டால் பிள்ளைகளுக்கு பயம். பயப்பட்டு என்ன செய்கிறார்கள்? 'தேள்' என்கிற சப்தம் கேட்டதும் எல்லாரும் அதை நசுக்குவதற்குத் தயாராக ஓடி வருகிறார்கள். அதை நசுக்கிக் கொல்லுமட்டும் பிள்ளைகளுக்கு பயம் நீங்குவதில்லை. அதை யெப்படியாவது பிடித்து நசுக்கிவிடவேண்டுமென்கிற குரூர எண்ணமும் தணிவதில்லை. தேளுக்குச் செய்வதும் ஜீவஹிம்சையே யானாலும், பிள்ளைப்பூச்சியை வதைப்பதற்கும் தேளை வதைப்பதற்கும் வித்தியாசமுண்டு. பிள்ளைப்பூச்சியை விளையாட்டாக வதைக்கிறார்கள். அதனல் பிள்ளைகளுக்கு யாதொரு தீங்கும் நேரிடாதென்கிற திடத்தினல், அதை "விளையாட்டு" என்கிறார்கள். பிள்ளைகளுக்கு "விளையாட்டு" பிள்ளைப்பூச்சிக்குப் "பிராணசங்கடம்" என்பதைச் சிந்திப்பதில்லை. தேளினல் பிள்ளைகளுக்குப் பிராணசங்கடம் நேரிடக்கூடியதா யிருப்பதால், அதைக் கண்டால் உடனே அதை நசுக்கிவிடப் பெரியவர்களும் சிறுவர்க்குதவியாக ஓடி வருகிறார்கள். இதனல் நாம் அறிவதென்ன? ஜீவஹிம்சை செய்வது அகங்கார ஜீவனும் மனிதனுக்கு இயல்பாய் அமைந்திருக்கிறது. அந்த அகங்காரத்தை யடக்கியாள்பவன் எவனே அவனே தீரன். அந்த அகங்காரத்தினல் தூண்டப்பட்டு ஜீவஹிம்சை செய்கிறவன் தீரனுக மாட்டான்; ஆனல் "குரூரன்" என்று சொல்லப்படுவான்.

குரூரஸ்வபாவமுள்ளவன் ஒருவனைப் பார்த்து "நீ குரூரன், கொடியன்" என்றால், அவனுக்குக் கோபம் வரும். அவன் தன் ஸ்வபாவத்தைக் காட்டுவான். ஆகையால் விவேகசாலிகள் உண்மையை உரைப்பதிலும் பிறருக்கு மனவருத்தமுண்டாகாதபடி தங்கள் புத்தி சாதுர்யத்தால் சுட்டாமற் சுட்டிச்சொல்லிப் பிறரை பெச்சரிப்பார்கள். குரூரஸ்வபாவமுள்ள மூர்க்கனைக் கண்டு, அவன் "மூர்க்கத் தனத்தை வெளியிட வேண்டி, இதென்ன அப்பா! கொட்டினல் தேள் கொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சியா!" என்று சொன்னல், அவன் சூக்ஷ்மபுத்தியற்றவனுதலால், தன்னைப்பற்றி யேதும் சொல்லவில்லை யென்று நினைத்து தன் மூர்க்கத்தனத்தைக் காட்டாமல் சொன்ன வார்த்தைகளுக்கு அர்த்தம் என்னவென்று யோசிப்பான். இதனல், யோசனை யற்றவனை யோசிக்கும்படி செய்வது ஒரு நன்மை; சூக்ஷ்மபுத்தியுள்ளவர்களுக்கு அவன் மூர்க்கஸ்வபாவ முள்ளவன், அவனேடு ஸகவாசம் செய்தால் எப்படியும் ஆபத்தே விளைப்பான் என்று சொல்லாமற் சொல்லி யெச்சரித்தலாகிற நன்மை யொன்று. ஆக இருவிதத்திலும் நன்மையுண்டு. மூர்க்கனை மூர்க்கனென்று சொல்வதால் உண்டாகும் தீமையும் இல்லை. எல்லாவற்றையும் விட இது மேலான நன்மை. இக்காலத்தில் முற்றுணர்வில்லா மூர்க்கர்கள் "நான் சத்தியத்தைச் சொல்லுகிறேன்" என்று சர்க்காருக்கு விரோதமான வார்த்தைகளைச்சொல் வன்மையின்றிச் சொல்லிவிட்டு இராஜநிந்தனைக் குள்ளாகி வீணுக்கு ஜெயிலில் சென்று தங்கள் வாழ்நாளை வீணாகக் கழிக்கிறார்கள். இது நாகாவாக் குற்றம்.

"வாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொன்
றீமையிலாத சொலல்." [றும்

என்பது திருக்குறள். ஆதலால் அத்தேவவாக்யத்தை யனுசரித்து உள்ளதைச் சொல்வதிலும் "யாதொன்றுந் தீமையிலாத சொலல்" தான் "வாய்மையெனப்படுவ" தாகுமென்பதை மனத்திலிருத்தி யாருக்கும் பொல்லாப்பின்றி உண்மையையே உள்ளவாறு சொல்லல் வேண்டும்.

"உள்ளத்தாற் பொய்யா தொழுகினுலகத்தார்
உள்ளத்துளெல்லாமுளன்."

பொய்யாத உள்ளமுடையோன் உயர்ந்தோர் உள்ளத்திலிருப்பான் என்பது மேலோர் வாக்காதலால் லார்ட்மார்லியின் "Better mind of India" என்கிற உயர்ந்தோருள்ளத்திற் கிதுவே லக்ஷணமா மென்றுறுதி கொண்டுரைக்கலானோம்.



## AGRICULTURAL NOTES.

## வியவசாய விஷயமான குறிப்புகள்.

By. Mr. H. C. Sampson, Deputy Director Of Agriculture.

சென்னை இராஜதானியின் அனேக இடங்களில் பயிரிடும் குடிகள் தங்களுடைய நஞ்சை நிலங்களை எருவிடுவதற்காக பச்சையிலைகளையும் கொழிஞ்சியிலைகளையும் சேகரித்து கட்டைவண்டி ரெயில்வண்டிமூலமாய் அதிகபணச் செலவுசெய்துக்கொண்டு போகிறார்கள். இவ்விதமாய் அதிகபணம் செலவு செய்கிறதைவிட மிகவும் சுலபமானவழி யொன்றிருக்கிறது. அதாவது, பச்சையெருவை நஞ்சை நிலங்களிலேயே பயிரிடுவது; அப்படி பயிரிடுவதால் எருவை நிலங்களுக்கு கொண்டுபோவதற்கு வேண்டிய செலவு மீந்துவிடும். அடியில்கண்ட குறிப்புகள் கும்பகோணத்திலும் பெரும்பூதூரிலும் பச்சையெருவை நஞ்சை நிலங்களிலேயே பயிரிடுவதற்கு என்ன செய்கிறார்களென்று சுருக்கமாய் காண்பிக்கும்.

(1) கும்பகோணம் விவசாய சங்கத்தின் பண்ணையில் தழை எருவுக்கென்று பயிரிடப்பட்ட சடம்பு (சணல்):—

கும்பகோணம் விவசாய சங்கத்தார் இந்த வருஷத்தில் ஜனங்களுக்கு அனுபோககரமாய் ரூபித்த தங்களுடைய சங்கத்தின் பண்ணையில் பயிர்செய்த சடம்பு (சணல்) பயிர் தஞ்சாவூர் ஜில்லாவில் விவசாயம் செய்யும் ஒவ்வொருவருக்கும் ரொம்பவும் உபகாரப்படத்தக்கது. ஆனிமீ மத்தியில் காலில் ஜலம் வந்தவுடன் வயல்களில் தண்ணீர்வரப் பாய்ச்சிஉழுது ஏகர் ஒன்றுக்கு சுமார் (ஆறு) பட்டணம்படி விதை தெளிக்கப்பட்டது. ஆகஸ்டு மீ 22-ந் தேதியில் மேல்சொன்ன பயிரைப் பார்க்கும்பொழுது அது சுமார் 3அடி (இரண்டுமுழம்) உயரம் வளர்ந்திருந்தது. நெல் சாகுபடிசெய்யு முன் இதை நிலத்தில் தழை எருவுக்கென்று அப்பால் உழப்பட்டது. இந்த நிலத்திற்கு வேறு குப்பை எருமுதலானதுகள் போடாமல் இந்தப் பயிரையே உழுது மக்கவைத்திருப்பதில் மாகசூல் எப்படி காணுமென்று ஆவலுடனும் சிரத்தையுடனும் எதிர்பார்க்கலாம். இப்படித்தழைப் பயிர் செய்து அதை உழுது எருவாக உபயோகிப்பதில் விதை செலவே தவிர வேறொன்றில்லை. பயிர் உண்டாக்க உழவு முதலானதுகளில் செலவாகுமென்று கொஞ்சபேர் ஆக்ஷேபனை சொல்லலாம். ஆனால் நெல் சாகுபடி செய்யும் நிலங்கள் ஆகஸ்டுமாதத்தில் முதல் முதல் உழுவது வழக்கம். அப்படிக்கில்லாமல் தழப்பயிர் செய்ய பிரயத்தனம் செய்யும் போது காலில் ஜலம் வந்தவுடன் ஜூன் மாதத்தில் முதல் உழவு போடப்படுகிறது. ஆகவே பின்னால் செய்யப்பட்ட உழவு முன்னால் செய்யப்படுவதால், உழவு செலவு ஜாஸ்தி இதனாலாகிறதென்று சொல்ல மார்க்கமில்லை.

---

2. திருச்சினாப்பள்ளி ஜில்லாபிரம்பலூர் தாலுக்காவில் தழை எருவுக்கென்று பயிரிடப்பட்ட அவுரிப் பயிரின் வரலாறு:—

பிரம்பலூர் தாலுக்காவில் அவுரிப்பயிரானது சாயத்திற்கென்று அனேக வருஷங்களாய் பயிரிடப்பட்டு வந்தது. ஆனால் அவுரிமருந்தின் (நீலத்தின்) விலை சகாயமான உடனே கொஞ்சகாலமாய் இந்தப் பயிரானது தழை எருவுக்கென்று சாகுபடி செய்யப்பட்டு வருகிறது. கிருஷிகருக்குதழை எரு சுலபமாய் அகப்பட மார்க்கமில்லாததினாலும், தழை எரு உப

யோகிப்பதின் குணம் சிலாக்கியமானதென்று குடியானவர்களுக்கு தெரிந்து எல்லாரும் அதை உபயோகிப்பதால் ஜாஸ்தி தழை எரு அகப்பட மார்க்கமில்லாமையினுலும், இந்த அவுரிப்பயிரை இந்த தாலுக்காவில் தழை எருவுக்கென்று பயிர் செய்கிறார்கள். பிரம்பலூர் தாலுக்காவின் மேற்குபாகத்தி லிருப்பவர்கள் தங்களுடைய சொந்த சாப்பாட்டு உபயோகத்திற்காக நஞ்செய் நிலங்களிலும், கிணற்றுப்பாய்ச்சல் நிலங்களிலும், கேழ்வரகு, கம்பு முதலாகிய பயிர்களை சாகுபடி செய்கிறார்கள். தங்களுக்கு நேரிடும் ரொக்கபணச் செலவுகளுக்காக நெல்லும் சாகுபடி செய்கிறார்கள். ஆகவே கிணறு ளிருக்கும் ஒவ்வொருவரும் நெல் கட்டாயமாய் சாகுபடி செய்து வருகிறார்கள். அந்தப் பிரகாரமே நஞ்செய் சாகுபடி செய்யும் குடியானவர்கள் ஒவ்வொருவரும் கிணறுகள் தங்கள் நிலங்களில் வெட்டி யிருக்கிறார்கள். அப்படிக்கில்லாவிட்டாலும் கிணறு வெட்ட வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். ஆகையால் நஞ்சை நிலங்களும் கிணற்றுபாய்ச்சல் நிலங்களும் எப்போதும் பயிரிடப்பட்டுக்கொண்டு இருக்கப்படுகின்றன.

மேல் சொன்ன நிலங்களில் தாழ்மாற்று (பயிர்மாற்றி) சாகுபடி செய்கிற வழக்கமு மிருக்கிறது. இவ்விடத்தில் சாதாரணமாய் கையாடிவரும் பின்குறித்த தாழ்மாறி பயிரிடுதல் மிக சிலாக்கியமானதாக விருக்கிறது. அதாவது மார்ச்சு ஏப்பிரல் மாதங்களில் கோடை கம்புகிணற்று இறைகால்பயிராக சாகுபடிசெய்யப்படுகிறது. இத்துடன் ஏகர் ஒன்றுக்கு சுமார் 3 பட்டணம்படி அவுரிவிதையும் கலந்து தெளிக்கப்படுகிறது. கம்புப்பயிர் ஜூலை கடைசிக்கு முன் அறுவடையாகிவிடும். அப்பால் அதில் விதைத்து இருக்கும் அவுரிபயிரை ஆகஸ்டு செப்டம்பர் மாதம் வரை வளரும்படி செய்து அப்பால் அதை சேற்றில் சடை சம்பாநெல் நடுமுன் உழுதுமக்கவைக்கிறார்கள். அடுத்த வருஷத்தில் நெல்லுக்கு பின்னால் இந்த கம்பும் அவுரியையே விதைக்கிறார்கள். இல்லாவிட்டால் கரும்பு சாகுபடி செய்கிறார்கள். மேல்சொன்ன கம்புப்பயிரும், கரும்புப்பயிரும் செய்யாவிட்டால் கேழ்வரகு நடுகிறார்கள். இதற்கு மாட்டுச்சாணி குப்பை முதலாகிய எருக்கள் போடுகிறார்கள். இது அறுவடை செய்தபின் காட்டுத்தழை எருவிட்டு சேத்தில் சடைசம்பா நெல் சாகுபடி செய்கிறார்கள்.

மேல் சொன்னபிரகாரம் அவுரித்தழை மக்கும் தாள் எருவுக்காக பயிரிடச் செலவு 3 பட்டணம்படி விதையே தவிர வேறில்லை. ஆகையால் இவ்விதமான கிணற்று இறைகால்பயிர்களும் நீர்பாய்ச்சும் சாதனமும் உள்ள எல்லா ஜில்லாக்களிலும் மேல் சொன்ன பிரகாரம் தழை எரு சொல்பமாய் விருத்திசெய்யக்கூடும்.



## NOTE ON CULTIVATION OF LIME.

## எலுமிச்சை சாகுபடி.

தஞ்சாவூருக்கு அடுத்த அய்யம்பேட்டை என்னும் கிராமத்தில் எலுமிச்சை சாகுபடி ஆகிறது.

பூமி:—எலுமிச்சை சாகுபடிக்கு நல்லவடிகாலுள்ள வண்டல் பூமி சிரேஷ்டம்.

நாளாங்கால்:—பூமியை இரண்டு அடி ஆழம் கொத்தி புழுதிசெய்கிறார்கள். அதில் நன்றாய் மக்கின மாட்டு எருவை ஏராளமாகப்போட்டு மண்ணுடன் கலக்கவேண்டும். மாசி (பிப்பரவரி-மார்ச்சு) மாதத்தில் மரத்தடியில் விழுந்திருக்கும் நல்ல பழங்களை அறுத்து காயப்படாமல் எடுத்த விதைகளை கையில் ஒட்டாமலிருக்கும்படி கொஞ்சம் சாம்பலில் புரட்டி பின் விதைகள் காய்வதற்கு முன் தயார்செய்த பூமியில் 4 அங்குலத்துக்கு ஒரு விதையாக ஊன்றுகிறார்கள். பிறகு அந்த நாத்தங்கால்மேல், வாழைசாகுகளைப்போட்டு நாத்தாங்கால் காயாமல் ஜலம் விட்டு வருகிறார்கள். களைகளை கையால் எடுத்து விடவேண்டும். கார்த்திகை மாதத்தில் கன்றுகள் சுமார் ஒரு அடி முதல் இரண்டு அடி வரை வளர்ந்திருக்கும். இப்போது இரண்டு அடிக்கு ஒரு கன்றுகை விட்டு விட்டு நடுவிலுள்ள கன்றுகளை ஜாக்கிரதையாய் பிடுங்கி இவைகளுக்காக வெட்டி எருவிட்டு தயார் செய்யப்பட்ட பூமியில் இரண்டு அடிக்குஒன்றுகநடுவார்கள். வெயில் காலமுழுவதும் செடிகள் காயாமல் ஜலம்

இறைத்துவரவேண்டியது. இப்படி வளர்த்த மூன்று வருஷத்திய கன்னுகளை ஆழமாய் கொத்தி எருவிட்டு தயார் செய்த பூமியில் 15 அடிக்கு ஒரு வரிசையாகவும் ஒவ்வொரு வரிசையிலும் 15 அடிக்கு ஒரு செடியாகவும் கார்த்திகை மாதத்தில் நடுகிறார்கள். கன்றுக ளுக்கும் செடிகளுக்கும் மத்தியில் கன்று கள் மரமாகும்வரை வாழை பயிர் செய்வது ண்டு. செடிகள்வைத்த மூன்றுவது வருஷ முதல் பலன் கொடுக்க ஆரம்பிக்கிறது.

வருஷாவருஷம் தோட்டத்தைக் கொத்தி நன்ருய் மக்கின சாணம் எருப்போட வேண் டியது. அம்மாபேட்டையில் அநேகமாய் மார்கழி மாசத்தில் கொத்தி எருவிடுகிறார் கள். ஆவணிமாதத்தில் கொத்திஎருவிட்டால் பழையினுல் எருவின் பலன் நன்ருய் புலப்ப றம். பிறகு மார்கழியில் ஒரு கொத்து மாத் டும் போட்டால் புல் பூண்டு மடிவதுடன் பூமி தளர்ந்து ஈரம்கார்க்கும். சாணி எருவே உத்தமம். எலும்பு தூள்பலனே விருத்திசெய் யும்.

கவாத்து:—செடிகளில் உலர்ந்த கிளைகளை அப்போதைக்கப்போது ஜாக்கிரதையாய் கத்திரித்து விடவேண்டும் ஒவ்வொரு செடி களிலும் பூமியிலிருந்து வரும் ஒன்று அல் வது இரண்டு பெரிய கிளைகளை மாத்திரம் விட்டுவிட்டு பாக்கி உபகிளைகளை நீக்கிவிட வேண்டும். கொத்திவிடவும் பழம்பொறுக்க வும் காற்ருேட்டத்துக்காகவும் செடிகளின் கீழ்கிளைகளை அதிகமாய் வைக்காமல் நீக்கி மேல்போகச்செய்வது உத்தமம். வெயில்கால முழுவதும் ஜலம் இறைத்து செடிகளை பாது காத்து வரவேண்டும்.

இப்படி ஜாக்கிரதையாய் தோட்டத்தை ஆதரித்து வந்தால் சராசரி ஒவ்வொரு செடி க்கும் 1000 முதல் 3000 பழம்வரை கிடைக் கும்.

ஏஸ். சுப்ரமணிய ஐயர்.

# KUNDALINI-YOGA PRADEEPIKA.

## I. THE ORIGIN OF DISEASE.

# குண்டலினியோகப் பிரதீபிகை.

## 1. வியாதிமூலம்:

வியாதி யிரண்டு விதம். சாரம் என்றும், சாமானியம்என்றும்சொல்லப்படும். "சாரம்" என்பது பிறவிநோய். "பவநோய்" என்றும் சொல்வார்கள். "சாமானியம்" என்பது அச னசயந பேதத்தால் சரீரத்தி லுண்டாகும் கோளாறுகள் (குற்றங்கள்). இந்த உடற்பிணி பவநோயோடு சேர்ந்து சிக்குற்றிராவிடில், அது தனக்குரிய வஸ்துவை யடைந்தால் நாசமடையும். இதற்கு ஆதாரம் ஞானவாசி ஷ்டத்திற் காண்க. "கேவலமிவ்வுடற்பிணி தான் தனக்கடுத்த பொருட்பேற்ருற் கெட் டுப்போகும்." எல்லாப் பிணிகளுமே "பூர்வ னையாம் ஆதிகளில்லாதாகிற் ருென்றுபிணி பறந்துபோம்" என்பது வசிஷ்டர் வாக்கியம். இப்படியாக வியாதிக்கு மூலம் ஆதியாகும். "ஆதி" யென்றால் என்ன? "அங்கத்தின் வரு த்தத்தை நோயென்பர் வாதனையை ஆதி யென்பர்." சரீரத்திலுண்டாகும் துன்பத்தை வியாதி யென்பார்கள். அந்தக்கரணவாசனை யை ஆதியென்பார்கள். இந்த அந்தக்கரண வாசனை பூர்வஜன்மத்தில் செய்த செய்கைக ளினுல் (பாபபுண்யத்தினுல்) ஸம்ஸ்கார ரூப மாக மனதிற் படிந்து அந்தக்கரணத்தை விட் டகலாது இருக்கும் வாசனுரூபமான ஸூக்ஷ்ம பாவனைகளாம். அபேதஞானம் லயித்து பே தஞானம் உண்டாகி விருத்திப்பதினுல், அந் தக்கரணவாசனுரூபமான இந்த ஆதியானது "நாபிமூலம்" என்று சொல்லும் உந்திக்கம லத்தின் அடிப்பாகத்தில், (சேற்றில் தாமரை போல்) உண்டாயிருக்கும்.

நீர்வற்றின குளத்தின் சேற்றில் மறைந்து கிடக்கும் ஆம்பல் (அல்லி தாமரை போன்ற வைகள்) நீர்ப்பெருக்கினுல எப்படி மறுபடி யும் முளைத்துத்தோன்றி விர்த்தியாகிறதோ

அப்படிப்போல, நாபி மூலத்தில் மறைந்து கிடக்கும் அந்தக்கரணவாசனரூப ஆதியானது "உயர்ஞான மில்லாமையாலும், இந்திரியங்களை யடக்கலாற்றுமையாலும், மனதில் விஸ்தாரமாய் ஆசையும் அகங்காரமும் வளர்தலினாலும், "இதுபெற்றோம் ஈதில்லையெனும் அவதானத்தாலும்" அவ்வாசனை விர்த்தியாகி மோகரூபமாய் கெட்டிப்படும். அந்த மோகம் விர்த்தியாய் வளர, மழைகாலத்துப் பனியைப்போல ஆதியானது நெருங்கித் தடித்து வளரும். இப்படி நெருங்கித்தடித்த மோகத்திலிருந்து ஆசையுண்டாகி வளரும். இந்த ஆசைமிகுந்து வெளிப்படுங்கால் மூடபாவனையுண்டாகும். மூடபாவனையானது (துர்புத்தி) மிகுந்து முதிருங்காலத்தில் நியமித்த வியவகாரத்தை பல்லிமல் கொடிய வியவகாரங்களிற் பிரவேசிக்கச்செய்யும். முறைதப்பிக் கொடிய வியவகாரங்களைச் செய்கின்றதனால் சரீர வியாதியுண்டாகும். அந்தக்கரண வாசனரூபமான "ஆதி" வியாதியாகும் கிரமத்தைச் சொன்னோம். இனிசாமானியமான வியாதியுண்டாகும் வழியைச் சொல்வோம்.

"பொல்லாத வுணவினாற் பொல்லாத தேசத்திற் போகையினாற், பொல்லாத விவகாரத்தாற் செய்தொழில்கள் புரிபொல்லாப்பாற், பொல்லாதகயவருறு கூட்டத்தாற் பொல்லாத பொருளெண்ணத்தாற், பொல்லாத இச்சையாற் பொல்லாத வெண்ணிக்கை பொருந்தல் தன்னால்."

என்று சொல்லிய எட்டுவித காரணங்களினால், நரம்புகளிடத்திற் கணுக்களினது 'ரந்தரங்கள்' (துவாரங்கள்) சிறுத்தல் பெருத்தலினாலும் நல்லபிராணவாயுவானது ஒடிச்சிதைவுறும். பிராணவாயுவானது இப்படிச்சிதறுதலும் தேகமும் சிதறுதலடையும். இப்படி தேகம் சிதைவுற்றிருக்கையில் மேலேசொன்ன எட்டுக்குற்றங்களாலும், மழை காலம் கோடை காலங்களினால் ஆற்று நீர்ப்பெருக்கும், அதன் குறைவும் (காய்தலும்) உண்டாவதுபோல, தேகத்தில் மிகுந்த வியாதியுண்டாகும்.

ஒரு நிலத்தில் தே, மா, புளி யென்னும் பலவகை மரங்களைவைத்துப் பயிராக்குங்கால், அந்த விருக்ஷங்கள், நிலம், நீர், தீ, கால் ஆகாசமென்னும் ஐம்பூதங்களின் சத்தையும் அதன் குணம்போல் கிரகித்து அவைகளைத் தன்மயமாக்குவதுபோல, உந்திக்கமலத்தில் மிகுந்துள்ள அந்தக்கரணவாசனையும் பூர்வஜன்ம ஸம்ஸ்காரத்தா லுண்டாயிருந்தாலும் சரி, இந்த ஜன்மத்திலுண்டானதாயிருந்தாலும் சரி, சுபமானாலும், அசுபமானாலும் சரி, அளவின்றி மிகுந்த வாசனையெதுவோ அது பஞ்சபூதங்களையும் தன்னிடத்தில் அவ்வண்ணமே கிரகித்துக்கொள்ளும். இப்படியாக ஆதிகளும் வியாதிகளும் பஞ்சபூதத்திலுண்டாகும். அது எப்படியெனில் பித்தவாசனைமலிந்த சரீரம் பித்தவிர்த்தியையே யுண்டுபண்ணும்; வாதசரீரம் வாதத்தையே விர்த்திசெய்யும்; சிலேஷ்மவாசனை மிகுந்த சரீரம்சிலேஷ்மத்தைவிர்த்திசெய்யும்; பித்தவாத சிலேஷ்மம் என்று சரீரத்தைப்பற்றிச் சொல்லியபடியே வாசனரூபமான காரணசரீரத்துக்கு (வித்யாதோஷத்துக்கு) ஸத்வ, ரஜஸ், தமஸ் என்கிற முக்குணங்கள் தம்மில் அளவின்றி மிகுந்ததெதுவோ அது தன்னிடத்தில் அவ்வண்ணமே கிரகித்துக்கொண்டு அந்தக் குணத்தைவிர்த்திசெய்யுமென்றுணர்க. பஞ்சபூதத்தில் வியாதியுண்டானதுபோல், பஞ்ச தன்மாத்திரையில் வாசனரூபமான வியாதி வித்தாம் "ஆதி" உண்டாய் விர்த்தியாகும்.

இந்த வியாதி வித்தாம் "ஆதி" முதலிற் சொன்னதுபோல் "சாமான்யம்," "சாரம்" என இருவகையாக விருத்தியாகி நசிக்கும். "சாமானியம்" என்று சொன்னது எதுவோ அதுவே உடற்பிணி. சாரமென்று

* சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் ஆகிய இவை பஞ்சதன்மாத்திரைகளாம்.

சொன்னதேபிறவிநோய். இவற்றில் உடற்பிணி "மணிமந்த்ர ஔஷதாதிகளால் பலநூற் கற்றகூரறிவின் மருத்துவரால் (வைத்தியரால்) போம்." இதிலுள்ள சூக்ஷ்மம் என்னவெனில் தேகத்திற்குரியவஸ்து எது குறைவு நிறை வாயிருக்கிறதோ அதை பல நூற்கற்ற கூரறி வினலறிந்து அக்குறை நிறையைப்போக்கி சமன்படுத்தல் வேண்டும். தேகத்துக்குரிய அபிமதவஸ்து லபித்தால் (கிடைத்தால்) சாமான்ய வியாதி நீங்கும்.

சாரமேனும் பிறவிநோயோ "தத்துவ ஞானத்தன்றிச் சற்றும்போகா" என்பது வசிஷ்டர் வாக்கியம். அது எப்படியென்றாலோ, பழுதையைக்கண்டு பாம்பென்று பயந்த "பவநோய்" பழுதையைப் பாம்பன்று பழுதையென்று அறியும் அறிவினலன்றி வேறுவிதமாகப் போகாதுபோலும், மாங்கொட்டை காலிற் கவ்வப் பாம்புகடித்ததென்று மூர்ச்சித்தவன் காலிற் கடித்தது பாம்பல்ல மாங்கொட்டையென்னு மறிவாலன்றி அவன் உள்ளத்துபயம் நீங்காது போலும். சொன்னதையே சுருங்கச்சொல்லவேண்டின், வியாதிக்குக் காரணம் ஆதி; ஆதிக்குக்காரணம் அஜ்ஞானம். காரணம் நசித்தாலன்றிக் காரியம் நசிக்காது. ஆதி நசித்தாலன்றி வியாதி நசிக்காது. ஆனல் மணிமந்த்ர ஔஷதப் பிரயோகத்தால் அந்த வியாதியின் தோற்றத்தை மாற்றலாம். மாங்கொட்டை கடித்து மூர்ச்சித்தவன், கடித்தது பாம்பன்று மாங்கொட்டை யென்கிற ஞானமுதித்தாலன்றி மாங்கொட்டையால் வரும் ஆபத்து அவனுக்கு நீங்கினதில்லை, மணிமந்திர ஔஷதங்களால் அவன் மூர்ச்சை தெளியவைக்கலாமானலும், மாங்கொட்டையை மாங்கொட்டையென்றறியாமல் பாம்பின் வாய் என்று மயங்கியறியும் மோகமுள்ளவரையில் மாங்கொட்டையினல் வரும் ஆபத்து அவனுக்கு நீங்கினதில்லை. ஆகையால் மூர்ச்சை தெளிவித்து மாங்கொட்டையை மாங்கோட்டையென்று அவனறியும் படிக்கு பிரத்யக்ஷமாக அவனுக்குக் காட்டினலன்றி அவன் பீதி அவனைவிட்டு நீங்காது.

அதுபோலவே வியாதிக்கு வித்தான ஆதியைப்போக்காமல் வியாதிக்குமட்டும் சிகிச்சை செய்து வருவதால் வியாதிகள் ஒன்று பலவாக விர்த்தியாகிவளருகின்றன. இக்கால நாகரிகப்படி ஜனங்களுக்கு வியாதியைப்போக்குவது புண்ணியமென்று ஆஸ்பத்திரிகளும் வைத்யசாலைகளும் ஏற்படுத்திவருகிறார்கள். இவை வேண்டியனவே யென்பதற் கையமில்லை. ஆனல் இங்கே வைத்தியஞ்செய்யும் "பண்டிதர்கள்" மனிதனை சேதனத்மகனகப் பாவிக்காமல் சரீராத்மகனகமட்டும் பாவித்து சரீரத்தில் கண்ட குறிகளுக்குத் தக்க பரிகாரம் செய்துவருவதால், வியாதிகள் மேன்மேலும் விருத்தியாகி புதிது புதிதான வியாதிகளைத்தனையோ கிளம்பியிருக்கின்றன. "வியாதி மூலம்" கண்டுபிடிக்கிறோமென்று பஹிர்முக விசாரணையே மிகவும்செய்து பற்பலவான ஜீவஅணுக்களை Bacteria வியாதி வித்துக்களென்று ஒரு தலைச்சார்பாய் விசாரித்து நிச்சயிப்பதால் அவை மேன்மேலும் கிளைவிட்டுப் பரவுகின்றன.

அப்படிக்கின்றி உண்மையாக உள்ளபடி வியாதி மூலத்தையறிந்து "ஆதி-வியாதி" யென்றுள்ள "சரரம்-சாமானியம்" எனும் இருவகை ஆதிகளையும் விவேகத்தால் பகுத்தறிந்து இரண்டுக்கும் காரணமான அஞ்ஞானத்தைப்போக்க யத்தனிப்பார்களேயானல் தேசத்திற்கு சுபிக்ஷமும் ஜனங்களுக்கு சுகிர்தமுமுண்டு அப்படிக்கில்லாமல் ஒருதலைச்சார்பாய்ச் செய்யும் சிகிச்சைகளால் எத்தனையோ நூதனமான நாகரீகவியாதிகள் (Fashionable diseases) உண்டாகக் காரணமாகின்றன. ஜனங்களுக்கு மனேதிடங்குன்றி தீரமும் தைரியமும் குறைகின்றது. ஏழைகளும் தனவந்தர்களும் அஜ்ஞான அந்தகாரத்தில்

† "ஜடஸ்பர்கம்" என்பது வசிஷ்டர வாக்கியம்.

மூழ்கி பசுவைக்கொன்று செருப்புதானம் செய்தவன் கதையாக உயிரைவதைத்து உடலுக்கு வைத்தியம் செய்கிறார்கள். ஆகையால் சாரமெனும் பிறவிநோய் "தத்துவஞானத்தன்றிச் சற்றும்போகா" வென்பதை யுணர்ந்து அசனாதிக்கிரம விரோதங்களாலுண்டான வியாதிகள்மட்டும் மணிமந்த்ர அவுஷதங்களினால் நசிக்குமென்பதை ஞாபகத்தில் வைத்து அசன (போஜனம்) சயன (தூக்கம்) முதலியவற்றில் முறைபிறழாது கிரமமனுசரிக்கவும்மனமே காரண மென்பதை யுணர்ந்து, அந்தக்காரண வாசனையாகிய "ஆதியில்" வியாதி உற்பத்தி லயமாகும் கிரமத்தை வசிஷ்டர் இராமருக்குபதேசித்த மெய்ப்புபதேசத்தையும்அதை யனுஷ்டித்து உள்ளங்கை நெல்லிக் கனிபோல். அதனுண்மையைக் கண்டனுபவித்த ஸ்வானுபவ ஞானத்தையும் கொண்டு தொடர்ந்தெழுதக் கருத்துற்றிருக்கிறோம். இதை வாசிப்போர் வேடிக்கை விநோதார்த்தம் பொழுதுபோக்குக்காகப் பத்திரிகைகளை விரித்துப் படித்துக் கொண்டே தூக்கத்தைத் தேடுவதுபோல் இதை வாசிக்காமல், உண்மையாக அறிவு விர்த்தியை நாடியுழைக்கும் தீக்ஷா புருஷனைப் போல் (தீக்ஷைபெற்ற மாணவனைப்போல்) மனதை நிறுத்தி அவதானத்தோடும் புத்தி நிதானத்தோடும் இதை வாசிக்க வேண்டுமாய்க்கேட்டுக் கொள்கிறோம். இந்த உண்மைகளெல்லாம் 15-வயதுப் பாலகனாகிய ஸ்ரீ இராமனுக்கு வசிஷ்டருபதேசித்தவுண்மையாதலால், இவை நம் சிறுவர்களுக்கேற்றவையல்லவென்கிற தப்பெண்ணம் வேண்டாம். ஸ்வய புத்தியைவிட்டு இரவல் மதிகொண்டு பிழைக்க வாரம்பித்துத்தான் நாம் இந்தக்கதியானோம். கட்டிக்கொடுத்த சோறும் சொல்லிக்கொடுத்த மதியும் வெகுகாலத்துக்குதவாவாகையால் எதையும் தானே தீர்க்கமாய் சிந்தித்து ஸ்வஞானத்தை விர்த்தி செய்துகொள்ள யாரும் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

## KUNDALINI—YOGA PRADEEPIKA.

### II. "THE MALADY OF THOUGHT."

### குண்டலினியோகப் பிரதீபிகை.

### 2. "ஆதி வியாதி"

ஆதியென்பது சாமானியமென்றும் சாரமென்றும், இருவகையெனச் செப்பி அவற்றின் லக்ஷணங்களை யெடுத்துச்சொன்னோம். சாரம் என்றதை "ஆதி" யென்றும், சாமானியம் என்றதை "வியாதி" என்றும் சாதாரணமாய் வழங்குவார்கள்: இவ்விரண்டில் ஆதியை (பவநோயை) "Psychological ailments" என்று சொல்வர் மேற்றிசை வைத்திய விற்பன்னர். ப்ரோபெஸ்ஸர் ஹக்ஸ்லி (Huxley) அவர்கள் இதை "Malady of Thought" என்று வெகு பொருத்தமாய்க் குறித்துப் பேசியிருக்கிறார். "பவநோய்" என்பதற்கு இது மிகவும் பொருத்தமான இங்கிலீஷ் பேராக விருக்கிறது. இந்த பவநோயிலிருந்து சாமானியமான உடற்பிணி எப்படி உற்பத்தியாகிறது? மறுபடியும் அது எப்படி லயமாகிறது?—நசித்துப் போகிறது (ஒடுங்கிப் போகிறது) என்று ஸ்ரீராமன் வசிஷ்டரைக் கேட்க அவர் பின்னும் விளங்கச் சொல்கிறார். அவர் உபதேசஸாரம் என்னவெனில்:—

(1) * "நின்ற மனங்கலங்குதலு முடல்கலங்கும்;"

(2) உடல் கலங்கினால் பிராணன் தன்னிலை தவறி தாறுமாறாய்த்தீய வழியிலோடும்.

(3) அது எப்படி யோடுமென்றால், வேடன் எய்த அர்த்த சந்திரபாணம் உடம்பில் தைத்த மான் எப்படி அந்த உபத்திரவம் பொறுக்காமல் வழிதப்பித் துள்ளியோடுமோ அப்படி பிராணன் துள்ளி போடும். இஃது நாடி யோட்டத்தில் நன்றாகத் தெரியும்.

(4) இப்படியுண்டான கலக்கத்தினால் பிராணவாயுவானது நாடி நிறைந்திருக்கிறதினாலுண்டாகும் சமமில்லாமல் பரந்தோடும். நாடிகளும் நிலையில் நில்லாது.

(5) இப்படி பிராணனும் நாடியும் நிலையில் நில்லாமல் சிதறிப் போவதனால் பிராணனோடு சேர்ந்து பலவகை போஜனங்களையும் பக்குவம் செய்கின்ற "வந்நிகலைகள் பத்தும்" தம் நிலையில் நின்று தத்தம் தொழிலைச்சரியாக இயற்றாது போகும். இதனால் சிரணாசிரணம் அதிசிரணம் என்கிற குற்றங்கள் ஏற்படும். இந்தக் குற்றங்கள் நேரிடுவதினால் அன்னாகாரம் தான் தங்குகின்ற சரீரத்துக்கு நமனாகும். அதாவது அதைப் போஷித்துக் காப்பாற்றுவதற்கு பதிலாக அதற்கு விஷமாயிருந்து அதைக் கொல்லும். இதற்குக்காரணம் நாடிகள் பிராணன்களுடைய சமனற்ற (நிலைகெட்ட) சலனமே.

சரீரத்திலுண்டாகும் நிலைகெட்ட நாடிகள் பிராணன்களுடைய சலன விரோதத்தால் உடலுக்காதாரமாயுள்ள அன்னமானது வேறுபட்டு தீராத வியாதியாகும். இவ்வாறாக ஆதியினால் வியாதி பிறக்கும். அதாவது மனோசலனத்தினால் பிராணன் சலனமடைந்து, அதனால் நாடிகள் நிலைகெட்டுப்போக, நாடிகளின் சின்னாபின்னமான சலனத்தால் ஜாடராக்னியின் தொழில் கெட, அதனால் அன்னம் ஆகாரமாகிப் போஷிப்பதின்றி விஷமாக மாறி வியாதியை விளைவிக்கும். இப்படியாக ஆதிவியாதியின் தொடர்பை நம்மில் சாதாரண ஜனங்களும் தத்துவார்த்தமாக வில்லாவிடினும் சாமானியமாகச் சொல்லக்கேட்டு அறிந்திருக்கிறார்கள். "மனக்கவலை பலக்குறைச்சல்" என்னும் பழமொழி இதற்குச் சான்றாகும். மேலே யெடுத்து விளக்கிக்காட்டியபடி தொடர்பில்லாமல் ஆதியானது (அந்தக்கரண வாசனை) கெடுமானால் வியாதிகளும் நாசமடையும். ஆகையால் இதற்குப் பரிகாரம் அந்தக்கரண சுத்தமே: ஆகையால் தான் மனோசுத்தம் தேகாரோக்கியத்திற்கும் இன்றியமையாததாயிருக்கிறது. மனிதப்பிறப்பு சிந்திக்கும் சக்தி வாய்த்ததாக விருக்கிறபடியால், தெரிந்தோ தெரியாமலோ மனிதனுடைய மனதானது ஒன்றைச் சிந்தித்துக்கொண்டே யிருக்கிறது. மனது என்றால் அதுவே "சங்கற்பவிகற்பரூபமானது" என்பது வேதவாக்கு; அனுபவத்தாலும் அது அப்படியே யிருக்கிறது. சங்கற்ப விகற்பமற்றால் மனது நசித்துப் போம். சங்கற்ப விகற்பமென்றால் "நினைப்பு மறப்பு." நினைப்பதும் நினைத்ததை மறந்து வேறொன்றை நினைப்பதும் ஆகிய இதுவே மனதின் தொழில். இந்த மனது தனக்கென்று ஒராதாரமின்றி ஆத்ம சந்நிதானத்தில் ஆத்மப்பிரகாசத்தினால் மட்டும் விளங்குவதாயிருப்பதால், இது "யத்பாவம் தத்பவதி" யென்கிறபடி எதை நினைக்கிறதோ அதுவாகிறது. இதிலுள்ள மர்மம் என்னவென்றால், மனதே நினைவின் ரூபமா யிருக்கிறபடியால், அது ஒன்றை நினைத்தால், அதுவேயாகவாய் விடுகிறது. மனது அறிபொருளேயாகி விளங்கும்போது, அறிவான் * அறிபொருளிரண்டும் ஒன்றேயாகி ஞாதுர்-ஞான-ஞேயம் என்கிற திரிபுடி நசித்துப்போகிறது. ஞாதுர், ஞான, ஞேயம் என்றால், அறிவான், அறிவு, அறிபொருள் என்று அருத்தமாகும் இம்மூன்றுமின்றி "நினைவு" என்பதில்லை. இம்மூன்றில் ஒன்று நசித்தால் மற்றிரண்டும் கூடவே நசித்துப்போம். மேலே மனோநாசமாகும் வழியைச் சொன்னோம். மனதுக்கு அறியும் சக்தியில்லை. ஆனால் "அறிவான்" † அறியும் கருவியாக விருக்கிறது. மூக்குக்கண்ணாடிக்குப் பார்க்கும் சக்தியில்லாவிட்டாலும் பார்ப்பவனுக்கு பார்வையை யுண்டுபண்ணுவதுபோல,

* ஞாதா, ஞேயம். † ஞாதா, சேதனன்.

மனது அறிவானுக்கு அறிவை யுண்டுபண்ணக் கருவியாக விருக்கிறது. "விஷயஞானம்" மனதின் சகாயமின்றி உண்டாகாது. மனது நசித்தால் ஸர்வம் பிரம்மமயமாகி விளங்கும். விஷயஞானமும், விஷயமும், மனோநாசத்தினால் அவ்விரண்டுக்கும் காரணமான பிரஜ்ஞான ப்ரம்மத்தில் (உள்ளறிவில்) அடங்கி ஒடுங்கிவிடும். அப்படியே தத்துவஞானமும் தத்துவங்களும், தத்துவ தரிசனத்துக்குக் காரணமான "யோகம்" நசித்தால், அவ்விரண்டிற்கும் காரணமான தத்துவாத்மிகமான சித் சக்தியில் ஒடுங்கிவிடும். "தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு" என்பது திருமந்திரோபதேசம்.

மனம் சரியை கிரியைகளை யனுசரித்து விர்த்தியடையும். யோகம், என்று சொல்லும் "சித்தவிருத்தி நிரோதனம்" (சித்தவிருத்தியை யடக்கிச் சித்தோடு ஐக்கியமாக நிற்கும் பிரயத்தன பூர்வமான பழக்கம்) பாவ சமாதியினால் அதாவது பூரணத்தியானத்தினால் விர்த்தியாகும்.

செயலற்றால் செய்தொழிலற்று மனநாச முண்டாகும். மனம் நாசமடைந்தாலும் அதற்குக் காரணமாகிய "பாவனம்" அந்தக் கரணத்தில் வாசனாரூபமாக விருப்பதால், வித்திலிருந்து மரம் முளைப்பதுபோல், அது அந்த வாசனாரூப சங்கல்பத்திலிருந்து மறுபடியும் வெகு சீக்கிரத்தில், முளைத்து விர்த்தியாகி பவாரண்யமாக வளர்ந்துவிடும். ஆதலால் "செயலற்றால் மனம் நசிக்கும்" என்று சொன்னது, மனோசேஷ்டை நிற்கும் என்று சொன்னதாகக் கொள்ளவேண்டுமேயன்றி மனமேமூலத்தோடு நசித்துப்போமென்றுசொன்னதாகக்கொள்ளக்கூடாது. மனதுக்கு மூலம் சங்கற்பமாதலால் பாவனா நாசத்தாலன்றி வேறு விதத்தால் மனதை வேரோடு களைய முடியாது.

பவசாதனத்தால் (அதாவது விஷயங்களின் உண்மையை யுணரச்செய்யும் உள்விசாரத்தால்) விர்த்தியாகும் யோகம் பவநாசத்தால் கழன்றுவிடும். சரியை (சேமித்தல்), கிரியை (செய்தொழில்), யோகம் (ஏகீபாவமாய் ஐக்கியப்பட்டு நிற்றல்) என்னும் மூன்றும் கழன்றால் மிகுந்து நின்றது ஞானமே இந்த ஞானஸ்வரூபத்தை யறிந்து ஞானஸ்வரூபமாதலே மனுஷஜன்மத்துக்கு சாபல்யம். இதற்கு முக்கிய சாதனம் "குண்டலினியோகம்." அதாவது குண்டலினி சக்தியோடு ஐக்கியமாயிருந்து உண்மைகளை யுள்ளபடி யறிதலாம். இந்தக்குண்டலினி சக்தியென்பது கிருமிமுதல் பிரம்மாவரையில் எல்லாருடம் பிலு மிருக்கிறது. எங்கும் எல்லாவற்றிலும் அந்தர்யாமியாயுள்ளது. குண்டலினி சக்தியில்லாவிட்டால் ஜீவன் என்பதே யில்லை. உயிருள்ள வஸ்துக்களெல்லாவற்றிற்கும் சூக்ஷ்மாதிசூக்ஷ்மமான இந்த சக்தியே பிராணாதாரமாயுள்ளது. வாசனைக் கிருப்பிடமாயுள்ள மலர்போல், பிராணனுக்கிருப்பிடமாய் இந்தக் குண்டலினிசக்தி யிருக்கிறது. இதன் சூக்ஷ்மத்தை யறிந்து இஃதோடு இரண்டறக் கலந்து நிற்பதே யோகத்தின் முடிவு. ஆகையால் எல்லா யோகங்களிலும் குண்டலினியோகம் மிகவும் மேலானது. எல்லா சக்திகளுக்கும் இருப்பிடமா யுள்ளது இந்தக் குண்டலினி சக்தியே. எல்லா தேவதைகளுக்கும் ஆதாரமா யுள்ளதும் இதுவே. அதிஷ்டானமா யிருப்பதும் இதுவே. எல்லா சக்திகளுக்கும் எல்லா தேவதைகளுக்கும் இந்தக் குண்டலினிசக்தி மூலாதாரமா யிருப்பதினால் தேகங்களிலெல்லாம் மேலான மானிட தேகத்திற்கு ஆதாரமான ஆறாதாரங்களுக்கும் மூலமாயுள்ள மூலாதாரத்தில் இந்த சக்தியைத் தொழுவது வழக்கம். இதன் செய்முறையும் அனுபவமுறையும்எட்டிலெழுதிக் காட்ட முடியாது. வாய்மொழியாக விளக்கவும் சாத்தியமில்லை. குருமுகமாக விசாரித்து

† 'அறிவு' என்றது இங்கு விஷய ஞானத்தைக் குறிப்பிடச் சொன்னது.

குருகடாக்ஷத்தினால் சிறுகச் சிறுக அப்பியாசம் செய்தே அறியவேண்டும். அப்பியாச காலத்திலும் அறிவது கஷ்டம். குருபக்தியால் சரியானவழி யறிந்து முறைபிறழாது அப்பியசித்து வந்தால், அப்பியாச முதிர்ச்சியால் வரும் அனுபவ பூர்த்தியில் எல்லாம் கரதலாமலகம்போல் (உள்ளங்கை நெல்லிக்கனிபோல்) விளங்கும். அதற்கு முன் எதும் சுத்தமாய் விளங்காது. ஆனால் பக்தியுக்தி மிகுந்த சிரத்தா புருஷர்கள் சிரவண மனனத்தால் இதிலுள்ள நம்பிக்கையை விர்த்திசெய்துக் கொள்ளலாம்.

மஹாத்மாக்களா யிருந்து விளங்கியவர்களெல்லாம், இந்த மர்மம் தெரியாமல் எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பின்னால் அதை நினைந்து புலம்பிப் பிரலாபித்திருக்கிறார்கள். அவர்கள் புலம்பிப் பிரலாபித்திருப்ப தெல்லாம் தாங்கள் பட்ட வருத்தங்களை நினைத்து சிஷ்டர்களுக்கிரங்கி, அவர்கள் தாங்கள் செய்து பட்ட தப்புகளையே செய்து படாமல், "முன்னே சென்றவன் கிணற்றில் விழுந்தால் பின்னே வருபவனுக்குத் திவட்டி பிடித்தாற்போல்" என்கிற முதுமொழியை யனுசரித்து தாங்கள் வழிதெரியாமல் நடந்து படுகுழியில் விழுந்ததை யெல்லாம் சொல்லிச் சொல்லிப் புலம்பி யிருக்கிறார்கள்.

"மூலத்துதித் தெழுந்த முக்கோணச் சக்கரத்துள்
வாலைதனைப்போற்றாமல் மதிமறந்தேன் பூரணமே."

யென்று பட்டணத்துப் பிள்ளையார் பூரணமாலையில் புலம்பி யிருக்கிறார். இப்படி ஒவ்வொரு மஹான்களும் பாடியிருக்கிறார்கள். பதினெண் சித்தர்களில் ஒருவர் இந்தப் பூரணத்தைப் பற்றி நன்றாகச் சொல்லியிருக்கிறார்.

"கண்டதொரு பூரணத்தின் மகிமை கேளு:
கால்மேலுந் தலைகீழும் நடுவு மாகி,
அண்டரொடு முனிவர்களுங் கண்டு போற்ற
ஆதவனும் அம்புவியுமதிலே நின்று
தொண்டுபண்ணு மைவர்களில் நாலுபேர்கள்
சுகம்பெறலா மென்றுசொன்ன வாசல் நாலு
கொண்டவர்கள் கண்டுவந்த தொண்ணூற்றாறு
கொள்கையெனக் காத்திருந்த குறிப்பைப்
[பாரே."

இதுவெல்லாம் இக்காலத்துப் படிப்புப் படித்தவர்களுக்கு புதிராகத் தோன்றும் ஆனால் இதிலடங்கிய உண்மையோ ஒவ்வொருவரும் அன்றாடம் ஜீவிக்க இன்றியமையாத் தன்மையதாம். இந்த உண்மையை அறியாமல் மானுடர் படும்பாடு அம்மம்மா சொல்லி முடியாது! இந்த வழியிலிறங்கி யுழைத்தாலும் அவர்களுடைய ஆதிவியாதிகளின் தொந்த பெந்தத்தினால் அவர்கள் வழிதெரியாமல் தட்டுக்கெட்டுத் தடுமாறித் தவிக்கிறார்கள். குரு கொடுத்த மேலேசொன்ன குறிப்பை (இலக்ஷியத்தை) பார்த்தவர்களுங்கூடச் "செய்தொழிலும் மனதும் வேறாய்ப் பல நாலைப் படித்துப் படுகுழியில் விழ்வார்" என்று சித்தர்கள் தம் அனுபவத்தால் சொல்லி யிருக்கிறார்கள். ஏனென்றால், இந்த வழியையறிந்து அறிந்த வழியைப் பிடித்து நடப்பதற்கான தீக்ஷைபெற்றில ராதலால், அவர்கள் மனஞ்சிதறி மாண்பிழந்து போகிறார்கள். இந்தவழி பிடித்து நடந்து கரைகண்ட சித்தர்வாக்கைக் கேளுங்கள்:—

"ஏற்றபடி மனம்போனாற் புத்திபோச்சு
எழைமதி போகாதே யென்தாய் பாதம்
போற்றுதற்கு ஐவரையும் மனதிலொன்றாய்ப்
புத்திசித்த மோர்நிலையில் நிறுத்திவாசம்
பூர்த்த மலரெடுத்து திருப்பாதம் போற்றப்
பொறியைந்து கருவிகாணுதி போமே."

"சித்தவிருத்தி நிரோதன"மான யோகமுறையைச் சுட்டாமற் சுட்டிக்காட்டிச் சூக்ஷ்மமாயுரைத்ததை இக்காலதேச வர்த்தமானங்களுக்கேற்ப, நித்தியப்படி ஜீவனத்துக்குபயோகமாகும்படி கூடியமட்டும் எளிதாய் விளக்கித் தெளியநடையில் வெளியிடக் கருதி தேவியருளை முன்னிட்டு இந்தக் குண்டலினி

யோகப்ரதீபிகையைச் சிஷ்டர்கள் இஷ்டர்கள் எளிதிலுணர்ந்துய்யுமாறு சுருதி யுக்தி யனுபவங்களுக் கொத்துவர, சாமானியரும் சிரத்தையும் பக்தியுமுடையோரரியினுணரும்படி எடுத்துச் சொல்ல இசைந்திருக்கிறோம். இதைச் சொல்லவும் கேட்கவும் கூலியில்லை, வேலியில்லை, காலியில்லை, தாலியில்லை. தனக்குத்தான் துரோகம் செய்யாச்சிந்தை யொன்றே வேண்டும்.

"தானே தனக்குப்பகையும் நட்டானும்" என்றார் திருமந்திரோபதேசம் செய்தருளிய திருமூலதேவர். ஆகையால் தனக்குப்பகையானவன் தன்னை விலக்கி தனக்கு நட்டானுமவனை இஷ்டமுடன் வரிக்கில் அதுவே முக்கிய தீக்ஷையாம். நாம் சொல்வதற்கோவெனில்,—

"சொல்வதற்கு இவளையல்லால் சுகம்வேறுண்டோ?
சூக்ஷ்மமெல்லா மிவளைவிடச் சூக்ஷ்மமுண்டோ?
நல்லவர்க்கு நடுவில்வீளை யாடும்வல்லி
நாதவிந்து ஒங்கார நிலையுங்காட்டி
வல்லவர்க்கும் நல்லவர்க்கும் வானேயென்பாள்
வரமவர்க்கு வேணதெல்லாம் வழங்கும் ரூபி
புல்லருக்கு ஆயுதமும் புல்லேயாகும்
புத்திகெட்ட லோபிகட்குப் புகலொண்ணாதே"

"புத்திகெட்ட லோபிகட்"கன்றி மற்றவராம் நல்லவர்களும் வல்லவர்க்கும் இதைப் புகலல் ஆகும். "குறைபொருளார்க் குண்மையோதிற் குற்றம்வரும் நற்றம் போமால் இறைமேலாணை புலம்பாதே யென்றியம்பினளென்னம்பாள் வாலை."

ஆதலால் குணமில்லார்க் குணர்வுமில்லையால் அவர்களுக்கு இதைச்சொல்லல் ஆகா. அப்படி யெனின்? சொல்லுதலின் பயனும் சொன்னதை யுணர்ந்துய்யும் செம்மை அவர்கட்கு உண்டாகமாட்டாது என்பதாம். இதற்கு அத்தாக்ஷிவேண்டுமேல் மற்றொரு பக்கத்தில் எம்பெருமான் ஸ்ரீ இராமானுஜருடைய பெருங்கருணையை விளக்குமோர் அரும்பெருங்கதையை ஸ்ரீமான் கோபிநாதர்ர்யர் "பரமகாருண்யம்: ஓர் திருஷ்டாந்தம்" என்று எழுதியிருக்கும் விஷயத்திற்காண்க.

† நட்டான்—நேசன்.

ஓம் தத்ஸத்.



## H. I. M's. MESSAGE TO THE PRINCES AND PEOPLE OF INDIA.

## இந்திய மன்னர்களுக்கும் பிரஜைகளுக்கும் மாட்சிமை தங்கிய மகாராஜா சக்ரவர்த்தியவர்கள் அனுப்பிய செய்தி.

1908-ம் வரு நவம்பர்மீ 4ந் தேதி போர்ட் ஸெயின்ட் ஜார்ஜ் கெஜட் அனுபந்தத்தில் பின்வரும் விளம்பரம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது:-"என்னுடைய அன்புக்குரிய அன்னையும் இந்த ராஜ்ஜிய சிம்மாசனத்தில் எனக்கு முன் வீற்றிருந்தவருமாகிய மாட்சிமை தங்கிய விக்டோரியா மகாராணியாரவர்கள் அதற்குமுன்னே ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரால் பரிபாலிக்கப்பட்டுவந்த இராஜ்ஜியங்களின் ஆட்சியைப் பலவான முக்கிய காரணங்களைக் கொண்டும் பார்லமெண்ட் சபையாரின் ஆலோசனையின் பேரிலும் அவர்களுடைய சம்மதத்தைப் பெற்றும் தாமே ஏற்றுக்கொண்டு இப்போது ஐம்பதுவருஷ காலமாகிறது. அக்காலத்தில் பயபக்தியுடன் ஏற்றுக்கொள்ளப்பட்ட மேன்மைவாய்ந்த இந்த வேலையின் ஞாபகார்த்தமாக இந்திய மன்னர்களுக்கும் பிரஜைகளுக்கும் வாழ்த்து கூறுவதற்கு இது தக்க வருஷோத்சவ மென்று எண்ணுகிறேன். நீண்ட காலவியாபக முள்ள உங்களுடைய தேசசரித்திரத்தில் ஐம்பது

வ்ருஷமென்பது ஒரு சாணளவுள்ள குறுகின காலவரையறையேயாயினும், இன்றோடு பூர்த்தியாகும் இந்த அரை நூற்றாண்டானது உங்களுடைய சரித்திர பூர்வகமான காலத்திலே பிரளயம்போல் மேன்மேலும் நிகழ்ந்துள்ள சம்பவங்களுள் நீடூழி பிரகாசிக்கும் ஒரு எல்லைக்குறியென விளங்கிநிற்கும். இராஜ்ஜிய பரிபாலனத்தை நேரே ஏற்றதைக் குறித்துச் செய்த விளம்பரத்தின் காரணமாக இந்திய ஆட்சியில் ஒருமைப்பாடு உறுதியா யேற்பட்டது மாத்திரமே யல்லாமல், புது சகாப்தமொன்றும் ஆரம்பமாயிற்று. இந்த சகாப்தத்தில் காரியம் நடத்துவது கஷ்டமாயிருந்ததோடுங்கூட, அதில் முற்போக்கு சிற்சில சமயங்களில் தாமதமானதாயிருப்பதாகவும் தோற்றியிருக்கலாம்; ஆயினும், விசித்தரமாய்ப் பிரிவுற்றிருக்கும் பற்பல வகுப்புகளையும் மானுடவர்க்கத்தைச்சேர்ந்த சுமார் முப்பதுகோடி பிரஜைகளையும் ப்ரிடிஷ் அதிகாரத்தின் கீழும் ப்ரிடிஷார் காட்டும் நெறியே செல்லும்படியும் ஒரு பான்மைப் படுத்தும் காரியமானது இடைவிடாமலும் உறுதியாயும் நடந்தேறியிருக்கிறது. சென்ற அரை நூற்றாண்டில் நாம் உழைத்துச்செய்த காரியங்களை நோக்கும்போது அவை நம் பார்வைக்கு ஸ்பஷ்டமாகவும் மனச்சாட்சிக்கு மாறுபடாமலுமிருப்பதாகக் காணப்படுகின்றன.

2. எவ்வித மானுட ஆளுகைக்கும் எக்காலத்திலும் எவ்விடத்திலும் சம்பவிக்கும் சங்கடங்கள் நாளுக்குநாள் தோன்றியிருக்கின்றன. அவைகளை ப்ரிடிஷ் அரசாட்சியைச்சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் உழைப்பு தைரியம் பொறுமை இவைகளுடன் ஆழ்ந்த ஆலோசனையுடனும் எக்காலத்தும் வழுவுறாததும் சலியாததுமான தீர்மானத்தோடும் நின்று எதிர்த்திருக்கிறார்கள். தவறுகள் நேர்ந்தகாலத்தில் அவைகளைத் திருத்தும் பொருட்டு என்னுடைய துரைத்தன காரியகர்த்தர்கள் சிறிதும் கஷ்டம் பாராமல் தன்மறுப்பு காட்டிப் பாடுபட்டிருக்கிறார்கள்: அக்கிரமங்கள் நிகழ்ந்திருப்பதாக நிரூபிக்கப்பட்ட காலத்தில், அவைகளைப் பரிகரிப்பதற்காக ஆற்றலுடன் உழைத்திருக்கிறார்கள்.

3. அனாவிருஷ்டி மஹாமாரி இவைகளினால் ஏற்படும் உபத்திரவங்களைத் தடுக்க எத்தன்மையான ராஜங்கச் சூழ்ச்சியாலும் இயலாது; ஆனால், இயற்கையாய் நேரிடும் இந்த கோரமான துன்பங்களைக் குறைப்பதன் பொருட்டு, சாமர்த்தியத்துடனும் ஊக்கத்துடனும் வேலைசெய்து என்னென்ன செய்யக்கூடுமோ அவைகளை யெல்லாம் அனுபவம் பெற்ற பரிபாலனகர்த்தர்கள் செய்திருக்கிறார்கள். உங்களுடைய நாட்டின் எல்லைகளுக்குள் யுத்தத்தின் காரணமாய் நேரிடக்கூடிய கோரமான துன்பங்களினின்றும் நீங்கள் வெகு காலமாகத் தப்பித்துக் கொண்டிருக்கிறீர்கள்; இவ்வளவு நீண்ட காலத்துக்கு இதற்குமுன் எப்போதாவது நீங்கள் உங்களுடைய நாட்டிலே அவ்விதம் தப்பித்துக் கொண்டிருந்ததாக உங்களுக்குத் தெரிந்தேயிராது. தேசத்தின் அமைதி சிதைவுறாமலேயிருக்கிறது.

4. 1858-ம் வருஷத்திற் பிறந்த மகாசாஸனத்திலே விக்டோரியா மகாராணியாரவர்கள் இந்தியாவில் அமைதியுடன் நடத்தக்கூடிய தொழில்களை உற்சாகப்படுத்தவும் பொது ஜனப் பிரயோஜனத்துக்கும் அபிவிருத்திக்குமுரிய வேலைகளை ஓங்கச்செய்யவும் அவ்விடத்தில் வாசஞ்செய்யும் சகலர்களுடைய நன்மையின் பொருட்டும் இராஜ்ஜிய பரிபாலனம் செய்யவும் தாம் ஆவலுடன் விரும்புவதாக உங்களுக்கு மேன்மைவாய்ந்த வாக்குறுதி கொடுத்தார்கள். உங்களுடைய லௌகிக சுகத்தையும் அபிவிர்த்தியையும் ஓங்கச்செய்யும் பொருட்டு முயற்சியுடன் அமைத்து நிறைவேற்றப் பட்டிருக்கிற ஏற்பாடுகள்-கருணையுடன்கூடிய அவ் வாக்குறுதியானது எவ்

வளவு ஊக்கத்துடன் நிறைவேற்றப்பட்டிருக்கிறதோ அதை உலகத்தாரறியக் காட்டுவதற்குற்ற சான்றுயிருக்கின்றன ; இந்த ஏற்பாடுகளின் பெருமையையும் தீரத்தன்மையையும் நோக்கும்போது இவைகளைக் காட்டிலும் சிறந்த ஏற்பாடுகள் எவையு மில்லையென்று தெரியவரும்.

5 சார்புமன்னர்கள், ஆளும்அதிபதிகள் ஆகிய இவர்களுடைய சுதந்தரங்களும் உரிமைகளும் மதித்துப் பரிபாலித்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன ; அவர்களுடைய ராஜபக்தி விசுவாசமும் புறழ்வின்றியிருக்கிறது. என்னுடைய பிரஜைகளில் எவருக்கும் அவருடைய மதக்கோட்பாட்டின் காரணமாகவாவது ஆராதனை காரணமாகவாவது அனுகூலம் செய்யப்பட்டதுமில்லை, தொந்தரையாகிலும் மனச்சஞ்சலமாகிலும் உண்டு பண்ணப்பட்டதுமில்லை. எல்லோரும் சட்டத்தினால் ஏற்படும் பாதுகாப்பை அடைந்திருக்கிறார்கள். உங்களுடைய நாகரிகத்தில் வேரூன்றியுள்ள சம்பிரதாயங்களுக்கும் கொள்கைகளுக்குமாவது மதக்கோட்பாடு அல்லது ஜாதி ஏற்பாட்டுக்காவது, மதிப்புக்குறைவின்றிச் சட்டமும் பிரயோகிக்கப்பட்டுவருகிறது; அது சிக்குகள் நீக்கப்பெற்ற உருவத்தில் அமைக்கப்பட்டிருப்பதுடன், புராதன ஜனசமூகத்தார் நூதனமான ஒரு உலகத்தில் நாளாவர்த்தியில் பிரவேசிப்பதற்குறிய ஆவசியகங்களுக்குதகற்றபடி அந்த சட்டத்தைப் பிரயோகிப்பதற்கான சாதனங்களும் பொருத்திக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

6. என்னுடைய இராஜாங்கத்தின் மீது ஏற்றப்பட்டுள்ள பொறுப்பைக் கணக்கற்ற பல்கோடி ஜனங்களின் எதிர்காலகதியானது தற்காலத்திலும் இனிவருங் காலங்களிலும் பொறுத்ததாயிருக்கிறது ; ஆகவே, நியாயமானகாரணமும் உண்மையான நோக்கமுமின்றியே குற்றத்துக்கு ஹேதுவாய்ச்செய்யப்படும் சதியோசனைகளை நிர்த்தாட்சிணியமாய் அடக்குவது சர்வோத்தமமான கடமையாகும். என்னுடைய இந்திய பிரஜைகளில் கோடிக்கணக்கானவர்கள் ராஜபக்தியும் விசுவாசமும் உடையவர்களாதலால் அவர்களுக்கு இந்த சதியோசனைகள் வெறுப்பை யுண்டாக்குமென்பதை நான் அறிவேன் ; மேலும், பிரஜைகளின் க்ஷேமத்தையும் அமைதியையும் விருத்திப் படுத்துவதற்கான என்னுடைய கருமத்தினின்றும் என்னை இந்த சதியோசனைகள் திருப்புவதற்கு நான் இடங்கொடேன்.

7. சரித்திரப்பிரசித்தமான இந்த வருஷோற்சவமானது ராஜகருணை ராஜானுக்கிரஹம் இவைகளின் விசேஷ அறிகுறி ஒன்றுமில்லாமல் முடிவதில் விருப்பமின்றி, மறக்கவொண்ணுதி சம்பவமாகிய மகுடாபிஷேக தர்பார் 1903-ம்வருஷத்தில் நிகழ்ந்தகாலத்தில் கட்டளையிட்டபடி நான் சட்டவிரோதமான குற்றங்களுக்காக நமது நியாயஸ்தலத்தார்களால் கிரமமாய்த் தண்டனை விதிக்கப்பெற்றுள்ளவர்களின் சிக்ஷையை ரத்து செய்ய வேண்டுமென்றும் பற்பல அளவுகளாகக் குறைக்கவேண்டுமென்றும் ஆக்கியாபித்திருக்கிறேன் ; மேலும், இக்காருணியச் செய்கையை குற்றஞ்செய்துள்ள மேற்படி நபர்கள் ஞாபகத்தில் வைத்திருந்து இனி குற்றமெதுவும் செய்யாதபடி நடந்துகொள்வார்களென்பதே எனது கோரிக்கை.

8. சர்க்கார் அதிகாரமும் சக்தியும் ஏற்பட்டுள்ள உத்தியோகங்களை யடைவதற்குரிய யோக்கியதாம்சமாக ஜாதி பேதத்தை ஒழிக்கும் விஷயத்தில் இடைவிடாமல் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இந்த விஷயத்தில், கல்வி பரவி அனுபவம் முதிர்ந்து இந்தியர்களில் புத்தி கூர்மையும் தக்கசாமர்த்தியமுமுள்ளவர்கள் பொறுப்புக்குரிய கற்பனைகளை நன்றாய்த்தெரிந்து கொள்வதற்கேற்ப இனி

மேல் உறுதியாயும் உண்மையாயும் அபிவிர்த்தி உண்டாகுமென்று நான் உத்தேசிப்பதோடுங்கூட நம்பிக்கையுடனும் எதிர்பார்க்கிறேன்.

9. முதலிலிருந்து பிரதிநிதிஸ்தாபன ஏற்பாடானது நாளாவர்த்தியில் உண்டாக்கத் தொடங்கப்பட்டது; மேலும், இந்த ஏற்பாட்டை விவேகத்துடன் விஸ்தாரமாய்ப் பிரயோகிப்பதற்கான காலம் வந்துவிட்டதென்று என்னுடைய பிரதிநிதியாகிய கவர்னர் ஜெனரலவர்களும் என்னுடைய மந்திரிகளில் மற்றவர்களும் அபிப்பிராயப் படுகிறார்கள். உங்களில் ப்ரிடிஷ் ஆட்சியால் வளர்த்து விர்த்யாகும்படித் தூண்டப்பட்டுள்ள கொள்கைகளை யுடையவர்களாயிருக்கிற முக்கியமான வகுப்பார்கள் தேசசுதந்தரவிஷயமாய் சமத்துவமும் சட்டநிரூபண விஷயமாக்வும் ஆட்சி விஷயமாகவும் தற்காலத்திருப்பதினும் பெரும்பாகமும் ;ங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று சுதந்தரித்துக் கேட்கிறார்கள். இந்தப்படி சுதந்தரித்துக் கேட்பதை விவேக பூர்வகமாய் பூர்த்தி செய்வதனால் தற்காலத்தி இுள்ள பரிபாலன அதிகாரத்துக்கும் சக்திக்கும் வலிவுண்டாமேயன்றி குறையாது. பரிபாலனம் நடத்தும் உத்தியோகஸ்தர்கள் அதனால் பாதிக்கப்படுபவர்களுடனும் அது விஷயமான சமுதாய அபிப்பிராயத்தைத் தூண்டி வெளிப்படுத்துபவர்களுடனும் கிரமமாய் சம்பந்தமுடையவர்களாயிருப்பதற்குத் தற்காலத்திலிருப்பதினும் அதிக சமயங்கள் வாய்க்கிறபட்சத்திலே ஷெ பரிபாலனமானது இன்னும், எவ்வளவோ பங்கு செவவையாய் நடந்தேறும். இந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக இப்போதுமுயற்சியுடன் ஏற்படுத்தப்பட்டுவரும் முறைகளைப்பற்றி நான் இவ்விடத்தில்பிரஸ்தாபிக்கப்போகிறதில்லை. அவை உங்களுக்கு சீக்கிரத்திலேயே தெரிவிக்கப்படும்; மேலும் அவை உங்களுடைய் காரியங்ள் இதகரமாய் அபிவிர்த்திபாவதில் ஏற்படும் ஒரு மேன்மையான தசைக்கு அறிகுறியாயிருக்குமென்று நான் பெரிதும் நம்புகின்றேன்.

10. என்னுடைய இந்தியசைனியங்களின் சௌரியத்தையும் விசுவாசத்தையும் நன்குணர்ந்தவனாயிருப்பதால், அவர்களுக்குஇயற்கையாகவே ஏற்பட்டுள்ள போர்க்குணங்களையும் அவர்களது சிறப்பான ஒழுங்கையும் போர்ச்சேவகம் புரியஅவர்கள் விசுவாசத்துடன் சித்தமாயிருப்பதையும் நான் இவ்வாறு பெரிதும்மதித்திருப்பதைக் காரிய ரூபமாய்க் காட்டுவதற்கு அடுத்துவரும் புது வருஷத்தைத் தக்க சமயமாகக் கொள்ளவேண்டுமென்று ஆக்கியாபித்திருக்கிறேன்.

11. விக்டோரியா மகாராணியாரவர்களுடையஇருதயத்தில் குடிகொண்டிருந்த மிகுப்பிரியமான நோக்கங்களில் இந்தியாவின்க்ஷேமமும் ஒன்றாயிருந்தது. 1875-ம்௵ நான் அவ்விடம் வந்துபார்த்தது முதல், இந்தியாவின் க்ஷேமத்தையும்இந்திய மன்னர்கள் பிரஜைகள் ஆகிய இவர்களின் க்ஷேமத்தையும் அன்போடும் அவாவோடும் கவனித்து வந்திருக்கிறேன்; இத்தகைய அன்பும் அவாவும் காலகதியால் வலிகுன்றுவனவல்ல. என் அருமைப் புதல்வராகிய வேல்ஸ் இளவரசரும் அவருடைய மனைவியாராகிய வேல்ஸ் இளவரசியாரும் உங்கள் நாட்டில் தங்கித்திரும்பிய காலையில் அந்நாட்டின் விஷயத்தில் உள்ளன்பும் அதனுடைய க்ஷேமத்திலும் திருப்தியிலும் உண்மையும் ஆர்வமும் பொருந்திய சிரத்தையு முடையவர்களாய்த்திரும்பினர். எனது இராஜ குடும்பத்தினருக்கும் வம்சத்தினருக்கும் இந்தியாவின் விஷயத்தில் இங்ஙனம் உண்டாயிருக்கும் தீவிரமான அநுதாபமும் ஆசையுமாகிய நேர்மையான உணர்ச்சிகள் - இந்த இராஜ்ஜியத்து ஜனங்களின் ஆழ்ந்து ஐக்கியப்பட்டுள்ள சங்கற்பத்தையும் கருத்தையும் காட்டுவதுமாத்திரமே யல்லாமல்,

அங்ஙனம் காட்டும்போது வெகு உண்மையாகவும் எடுத்துக்காட்டுகின்றன.

12. சரித்திர பூர்வகமான காலத்துக்குச் சம்பந்தப்பட்ட எந்த இராஜ்ஜியம், அல்லது சமஸ்தானத்திலும் அதிபதிகளுக்கும் பிரஜைகளுக்கும் இதுகாறும் ஒப்பிக்கப்பட்டுள்ளதை யொப்ப மகிமைபொருந்திய ஒரு பொறுப்பை நிறைவேற்றுவிப்பதற்காக வேண்டியிருக்கும் ஞானமும் பரஸ்பர நல்லுணர்ச்சியும் கடவுளின் இரட்சணியாலும் அனுக்கிரஹத்தாலும் வலியுறுவதாக.

எம். ஹாமிக்,
சீவ் ஸெகெர்டெரி.



## MAHISUTA—A NOVEL.

## மஹீஸுதா.

(ஒரு ஹிந்துமாது எழுதியது.)

5-ம் பரிச்சேதம்.

---

"ஸர்வாஸுகாஸ்பதர, ஸக்யாஹமீரா, ஸாரஸமாதலேஸத்குண ஸாந்திரா" ஸா ரி ஸா ப ம பா வென்று ஹமீர்கல்யாணி ராகம் வெகு இனிமையாய்ப் பாடப்படுகிறது. ஸ்வரங்கள்வரும் அழகு மிப்பல்லவியைத்திருப்பித் திருப்பி ஸங்கதிகள் போட்டு ராகம், தாளம், சுருதி லயம், பிசகாமல் ஸங்கீதம் கேட்கிறது. அதிமதுரமான குரலோசை ஜேங்கார நாதத்துடன் ஸிம்ஹத்தைப்போல் கர்ஜிக்கும். வீணைமீட்டும்சப்தம். சிலநேரத்துக்குள் "மதனமோஹனகாரா ஸுந்தரா மதவிந்தாரகபண கம்பீரா" கா பா க ப த தா க த ப கரீ, கா ரீ ஸ ரி க த ப, வென்று மோஹன ராகத்தில் பாடப்பட்டது. மோஹனராகம எள்ளளவும் பிசகாமல் கேட்போரின் மனம் கரைந்துருகும்படி ஒலித்தது. சிலநிமிஷத்துக்குள், "ழன்மதஸாயகாதோடீரா மன்மன ஹருஷவிசிதமந்தாரா," தா தா நி ஸா நி ரி ஸ ஸா நி த நி த த ம வென்று தோடி ராகத்தில் பல்லவி யாரம்பமாயிற்று. சுரோதாக்களின் நயனங்களில் ஆநந்த பாஷ்பம் வடிந்தது. வஸந்தம், கல்யாணி, சோகிலத்வனி, பலமஞ்சரீ, முதலியராகங்கள் ஆலாபனம் செய்யப்பட்டன. காலத்துக்கேற்ற ராகங்களை வாசித்தால் ஸந்தோஷம் அதிகரிக்கும். உத்யான வநத்திலிருந்த பக்ஷிகளெல்லாம் கானத்தால் ஆஹாரமுண்ணமல் சாய்ந்திருந்தன. யாரோ ஈசுவரனை கானத்தால் ஸ்தோத்திரம் செய்தார்களென்று தோன்றுகிறது. "ஸாமகானலோலா" என்று மஹேசுவர நாமத்தைப்பாடினார்கள். அதுவும்முடிந்தது. ஸாமஜகாமினி, காமிததாயினீ, சியாமலே கிஸலயே கோமலே விமலே, என்று ஜெகதீசுவரி ஸ்துத்யம் செய்தனர். வீணாநாதம் துவனித்துக்கொண்டே இருந்தது. ஜகதம்பிகே, ஐலஜாம்பகே, ஜகன்மோகினீ, ஜகத்காரணி திரிலோக சங்கரீ, நித்தியாநந்தஸ்வரூபிணி, ஸ்ரீவாணி, தேவி, கிருபாகடாக்ஷிணி என்னும் பாட்டை மத்யமாவதி ராகத்தில் பாடப்பட்டது. இரண்டுமணி நேரமாயும் ஸங்கீதம் சப்தித்துக்கொண்டேயிருந்தது. ஆரம்பம் முதல் அந்தியம்வரை ஆநந்த ரஸத்தையே அதிகமாய் வர்ஷித்தது. தேவகானமும் இதற்கு நிஹரல்ல, காநாநந்தினியான தேவியே பாடுபடுகிறவர்களுக்கு இவ்வித சக்தியைக் கொடுத்திருப்பாளென்பதிற் சந்தேகமில்லை. மறுபடியும்

"ஜயத்ரிபுரஸுந்தரீ யாம்பாஹீ
ஜபஜபஜல்பேசுவாரமணீ
வாணீகமலேந்திராணீஸுமகுட
பானீராஜிதபதகமலே
அம்பசிவேகமலாம்பிகெஸோதரி
ஸாம்பஸதாசிவகந்தகரீ
கிஞ்சின்னதஜன ஸஞ்சிதநவமணி
பஞ்சனதீச பிரபுலவனே,"
மங்களம் பாடி நான் மனமகிழ்ந்தேனே"

என்று முடிந்தது. சிலநேரம் நிச்சப்தம். வீணை நித்திரைபோயிற்று. கண்டம் மறைந்தது. சுகபிகங்களெல்லாம் விழித்தன. மனிதர்களெல்லாம் முகம்மாறினார்கள், ஸங்கீதகானம் மாயமாயிற்று.

சுக்ரவார மானதால் லலிதா தேவியை ஸஹஸ்ர நாமத்தால் பூஜை செய்தார்கள். பூஜாமந்திரத்தின் வாசலில் வாழைமரங்கள் கட்டியிருந்தன. தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. சித்ர விசித்திரகோலங்கள் போடப்பட்டிருந்தன. சதுர்புஜமூர்த்தியான தேவி புஷ்பராசிகளால் மறைபட்டிருந்தாள். ஊதுவத்தி, பன்னீர், ஸுகந்தம் வீசும் புஷ்பங்கள், வாஸனையைத் தரும் தைலங்களெல்லாம் தேவிக்கு ஸமர்ப்பிக்கப்பட்டிருந்தன. அபிஷேக அர்ச்சனை, மங்களங்கள் முடிந்தவுடன் அம்பிகையை வணங்கி விடை பெற்றுக்கொண்டு ஸந்தோஷ முகத்துடன் ஒரு ஸ்திரீ வெளியே வந்தாள். அவள் முகத்திலுள்ள வியர்வைத்துளிகளை அவள் ஸகி தன் வஸ்திரத்தால் துடைத்து விசிரியால் விசினாள். 'ஸகி! என் ஜனனியை விட்டுவர மனமில்லையே'! என்றாள். 'அம்மணீ, உன் மாதா உன்னோடிருக்கிறாள். அவள் தனித்திருக்கவில்லை, நேரமாயிற்று. இன்றைபதினம் நெடுநேரம் ஸ்தோத்திரம் செய்தாய். பலன் சீக்கிரம் கிடைக்கும். போஜனம் செய்யலாம்வா வென்றாள். என்ன டபரிஹஸிக்கிறாய், நான் பலனைக்கோரியா ஸ்தோத்திரம் செய்தேன். என் மனம் உனக்குத் தெரிந்திருந்தும் இவ்விதம் சொல்லுகிறாயே!' 'இல்லை யம்மா. உனக்கு பலன் கிடைத்தால் வேண்டாமென்று நீக்கி விடுவாயோ'? 'ஸகி பலனை இச்சித்து ஒருவேலையும் செய்யக்கூடாதென்று நீயே அடிக்கடி சொல்லுவாயே!' 'ஆம். நான் சொன்னது வாஸ்தவ்யமே. தானாய்த்தேடிவந்தால் தள்ளுவாயோ எற்றுக்கொள்ளுவாயோ? அதைச் சொல்லேன்'! 'நீ வம்புக்காரி உன்னோடு நான் பேசமாட்டேன். காற்று வருமிடத்தைச் சொல். சற்றுநேரம் உட்காருகிறேன்.' 'நல்லதம்மா, நான் உள்ளே சென்று போஜன பதார்த்தங்கள் ஸித்தப்படுத்தி வைக்கிறேன். நீ இந்தஸ்படிக, சிலாக்கிருகத்தில் சற்றுநேரம் விச்ரமித்துக்கொள், போகிறே'னென்று கூறிச்சென்றாள்.

ஸுந்தரி ஒரு மஞ்சத்தில் சாய்ந்தவண்ணமாய்ப் படுத்தாள். நேரம் சென்றதும் அவளெதிரில் ஒரு புருஷரூபம் நின்றது. அவள் யாரென்று பார்த்தாள்; தனக்குத்தெரிந்தவனென்றறிந்ததும் பக்கென்று சிரித்தாள். சிரிப்பை யடக்க ஸாத்தியமில்லை. சிரித்து ஸகீ சீக்கிரம் வாவென்று கூவினாள். நின்றவன் 'மகாராணீ, என்ன நகைக்கிறாய்! எனக்குக்கல்யாணம் வரப்போகிறதென்றேன் என் ஸ்நேகிதர்கள் புஷ்பங்களால் அலங்காரம் செய்திருக்கிறார்கள். மஞ்சரி உனக்குக்கான்பிக்கும்படி அனுப்பினான். நான்வந்தேன். அழகாயிருக்கிறேனா, இல்லையா' வென்றான் ரமணி முன்னிலும் அதிகமாய்ச் சிரித்து 'ரகுபதீ மணக்கோலம் பூண்டிருக்கிறாய்; ஊமத்தை, எருக்கை, செம்பருத்தி, காட்டுக்கதிர், தும்பை முதலிய புஷ்பவர்க்கங்கள் உனக்கேற்றவை, யார் பொறுக்கி முடித்தனர்; ஹாரம்பேஷாயிருக்கிறது. உன் சினேகிதர்கள்யார்? இங்கே அழைத்துவா பார்க்கலாம்' என்றாள். ரகுபதி ஓட்டோட்டமாயோடினான் மஹீஸுதை அவனுடைய மௌட்யத்தைக்கண்டு தனக்குள்ளே ஆலோசனை செய்யலானாள். இதற்குள் ரகுபதி ஓடோடி வந்து 'அம்பா இங்கே பாருங்கள். இவர்கள் தான் எனக்கு அலங்காரம் செய்தவர்கள்' என்று கைகயைக்காட்டினான். மஹீஸுதை நகைமுகத்தோடு மெள்ள எழுந்திருந்தாள். ஸ்னானம் செய்திருந்ததால் தலைமயிர் கட்டாமலிருந்தது. கட்டிலின் சந்தில் கேசராசி அகப்பட்டு எழுந்திருக்கும்போது தடை செய்தது. மஹீஸுதை தன் கைகளால்

தலைமயிரை மெதுவாயெடுத்து எழுந்து உட்கார்ந்தாள். ரகுபதி சந்தி பல்லை யிளித்து நாட்டியமாடினான். மண்டபத்தின் வெளிப்படியில் ஒரு ராஜபுருஷன் வீரரஸகாந்தி வீச தன் நேசனோடு பேசிக்கொண்டிருந்தான். மஹீஸுதை பிரமித்தாள். அவள் ஸந்தோஷமுகம் பயத்தை யடைந்தது. கட்டிலிலிருந்து கீழிறங்கினாள்; வெளியே போவதற்கு ஒரே வழியுண்டு: மார்க்கத்தில் வந்தவர்கள் நின்றிருந்தனர்; ஸங்கோசத்தால் அவர்களோடு பேச முடியவில்லை. 'மகாராணீ, என்னைப்பாரேன், நான் அழகாயிருக்கிறேனா இல்லையா சொல்லேன். மஞ்சரி நன்றாயிருக்கிறதென்றாள். நீ ஒன்றும் சொல்லாமலிருக்கிறாயே' என்று ரகுபதி பேசினான். மறுபடி மஹீஸுதைக்கு சிரிப்புண்டாயிற்று. தன் முந்தாணித் தலைப்பால் வாயை மூடிக்கொண்டே மனதுக்குள் நகைத்தாள். இதற்குள் மஞ்சரி அவ்விடம் வந்து, 'நேரமாயிற்றே, பசியில்லையா, வா' வென்றழைத்தாள். மஹீஸுதை மௌனமாயிருந்தாள். 'மஞ்சரீ நான் மகாராணியை அலங்காரத்தைப்பற்றிக் கேட்டும் வாய்திறவாமல் யோசிக்கிறாள். உனக்கு பதில் சொல்வாளோ' வென்று ரகுபதி கூறினான். மஞ்சரி: 'பிரதாபலங்கேசுவரா வாயை மூடு, தெரியுமா, தோட்டத்துக்கப்பால் தள்ளுவேன்.' 'இல்லை, இல்லை இனிமேலில்லை, என்னைத் தள்ளாதே, இவர்கள் எனக்கு மணக்கோலம் செய்துவிட்டார்களே, எனக்கென்னகுறைவு!' என்று கூத்தாடலானான். வந்த ராஜகுமாரர்கள் சிரித்தார்கள், மஹீஸுதையும் மஞ்சரியும் சிரிப்பை யடக்கமுடியாமல் 'ரகுபதீ! போதும், போதும், வேஷம் வெகுஅழகாயிருக்கிறது' என்றனர். மஞ்சரி ரகுபதியை நிறுத்தச் சொல்லியும் கேட்கவில்லை. அவள் கோபங்கொண்டு 'ரகுபதி! இதோ வந்தேன்!' என்றாள். அவன் பயந்து டன்கட்டிலின் கீழ் ஒளிந்துக் கொண்டான். இதென்ன விந்தையென்று மஹீந்திரன் பிரதீபனைக் கேட்டான். பிரதீபன் வநத்திலிருந்த ஜீவன் தன் ஸ்வபாவத்தைக் காட்டுகிறது என்றான். மஞ்சரி அதிதிகளே உங்களுக்கும் போஜனம் ஸித்தமாயிருக்கிறது. ஆகாரமுண்டபிறகு மற்ற விநோதங்களைப் பார்க்கலாம் என்றாள். அவர்களும் நல்லதென்று அரண்மனையை நோக்கி நடந்தனர்.

மஞ்சரி மஹீஸுதையின் கையைப் பிடித்துக்கொண்டாள். மஹீஸுதை 'மஞ்சரீ! சற்றுப்பொறு, போகலாம்' என்றாள். 'அம்மணீ! என்ன ஸமாசாரம், எதற்காக பொறுத்துப் போகல்வேண்டும்! சொல்' லென, மஹீஸுதை ஒன்றும் சொல்லாமலிருந்தாள். 'ராஜகுமாரீ! தவத்தின் பலன்கிடைத்தது; தள்ளுவாயோ, தாங்குவாயோ தெரியாது, வா! பிறகு பேசிக்கொள்ளலாம்.' என்று மஞ்சரிசொல்ல,

மஹீ:—மஞ்சரீ அந்த மகா புருஷன் யார்? அவரோடு வந்தவர் என்ன உறவாக வேண்டும்? இவர்கள்எங்கிருந்து வந்தார்கள்?

மஞ்ச:—எனக்குத் தெரியாது! உன் தாய் அழைத்துவந்திருப்பாள். நானும் உன்னைப் போலவே ஆச்சர்யப்படுகிறேன்.

மஹீ:—ஸகி! நீயிருக்கும்போது அற்ப ஜீவன்களும் இக்கோட்டையில் ஸஞ்சரிக்க பயப்படுமே; மனிதர்களை நீ தாராளமாய் நடக்க விடுவாயோ! உன் ஸாமர்த்தியத்தை என்னிடம் ஒளிக்காதே உண்மையைச்சொல்.

மஞ்ச:—மஹீஸுதா! அவர்களைப்பற்றி நீ எதற்காக கேட்கிறாய்! உனக்கு அவர்களின் பரிசயத்தாலாகும் பிரயோஜன மென்ன! எழுந்திரு சாப்பிடப்போகலாம்.

மஹீ:—நீ சொன்னு லொழிய நான் வர மாட்டேன்! எனக்கு ஆகாரம் வேண்டாம்.

மஞ்ச:—ஆரம்பத்திலேயே முஷ்கரம்பிடிக்கிறாய்; அவர்கள் வழிப்போக்கர்கள், பாதை தெரியாமல் கோட்டைக்குள் நுழைந்தார்

களாம்; பசியோடு வந்தவர்களை அன்னமிட்ட னுப்புவது தர்மமென்று அவர்களை சில நேர மிருக்கும்படி கூறினேன்.

மஹீஸுதையின் வதனம் விவர்ணமாயி ற்று; பேசவில்லை. மௌனத்தோடு கட்டிலில் படுத்துக்கொண்டு ஆலோசித்தாள். மஞ்சரி அவள் முகம் மாறினதைப்பார்த்தாள். 'மஹீ ஸுதா எழுந்திரு, போஜனம் செய்யவா' வென்று கையைப் பிடித்துத் தூக்கினாள். மஞ்சரி வார்த்தைக்கு மறுத்துப் பேசமுடி யாமல் எழுந்திருந்தாள். மஹீஸுதையின் நிலைமையைப்பார்த்தவுடன்மஞ்சரிசிரித்தாள். அவளுக்குக் கோபமுண்டாயிற்று. மஞ்சரி யின் கன்னத்தில் பளீரென்று ஓர் அறை கொடுத்தாள். 'என்னம்மா, இது வெகுமதி யோ நான் போகிறேன். நீ தனியாயிருந்து ஆலோசனை செய்'யென்று மஞ்சரி போகலா னாள். போகும் போதே'கல்யாணகாரியங்களை சீக்கிரம் முடிக்கவேண்டும், பந்தலில், மண்ட பங்கள் ஏற்படுத்த ஆட்களை வரவழைக்கிறே' னென்றாள். "மஞ்சரீ என்ன உளறுகிறாய்உன க்கு விவாஹமா?"வென்றாள். "எனக்கு விவா ஹம்" என்று கட்டிலின் கீழ் ஒளிந்திருந்த ரகுபதி தன்மார்பைத் தட்டிக் கொண்டே எழுந்திருந்தான். மஹீஸுதா திடுக்கிட்டு "சீ,சீ விலகு! மஞ்சரீ இதென்னடி சிவபூஜை யில் கரடிவந்திருக்கிறது" என்றாள். "இதோ வேட்டையாடுகிறேன்" என்று ஒரேதாண் டாய்த்தாண்டி, ரகுபதிசந்தின் குடுமியைப் பிடித்துக்கொண்டு அவனை அங்கு மிங்கும் சுற்றியடித்தாள். இதுதான் கல்யாணவேடிக் கையென்று இரண்டு கன்னங்களையும் கை யால்திருகினாள். வலிக்கிறதே! என்று அவன் அழுதான். "ஆனால் கல்யாணமில்லை போ"! வென்றுநெட்டிப்பிடித்துத் தள்ளினாள். குப் புற விழுந்து பல்லில் ரத்தம் வழிய இனி மேல் அப்படி சொல்லமாட்டேன். நீ அடிக்க லாமென்றான். மஞ்சரி "போடா, பைத்யக்கா ரா, வந்திருப்பவர்களை ஓடி அழைத்துக்கொ ண்டுவா; உனக்கு ஸாக்ஷியாயிருப்பார்கள்" என்றாள். ரகுபதி குண்டோட்டம் குதிரை யோட்டமாயோடினான். இருவரும் சிரிப்பை யடக்கமுடியாமற் சப்தமிட்டனர்.

---

### 6-ம் பரிச்சேதம்.

ராஜதர்மசாஸ்திரப்படி எல்லாக்கட்டடங் களும் அமைக்கப்பட் டிருந்தன. விநோத மஹலின் ஸ்ரீங்காரம் கண்களைக் கவர்ந்தது. பட்டு, ஜரிகை, முத்து, நவரத்நம் மிருது வான இறகுகளால் அநேக வஸ்துக்கள் சோ பித்தன. ஸுவர்ண பாத்திரங்கள் ஓரிடத்தில் வரிசையாய் வைக்கப்பட்டிருந்தன. ஸுகந்த வாஸனை நாஸிகத்தைத்துளைத்தது. மத்தியி லுள்ள பத்ராஸனத்தின்மேல் ஒரு யுவகன் உட்கார்ந்து தாம்பூலம் போட்டுக் கொண்டா ன். அவனருகில் ஒரு புருஷன் நின்றான். எதி ரில் ஒருஸ்திரீ நாற்காலியிலுட்கார்ந்து ரஸிக வசனத்துடன் வார்த்தை யாடுகிறாள். அந்த மஹலில் இவர்களைத் தவிர வேறு யாருமி ல்லை. மஹீந்திரன், பிரதீபன், மஞ்சரி ஆகிய இவர்களே அங்கிருந்தனரென்று நாம் சொல் லவும் வேண்டுமா.

மஞ்ச:—எளியவர்களின் வீட்டைத் தேடி வந்தீர்கள். எங்கள் பாக்யத்துக் கிணையுண் டா! பொழுதாயிற்று. எழுந்திருக்கலாம்,உங் களுக்கு வழி காட்டுகிறேன்.

மஹீ:—நாங்கள் கிஞ்சித்து புண்யம் செய் திருந்தோம். உங்களுடைய உபசாரத்துக்கு என்ன பிரதியுபகாரம் செய்யப்போகிறோம்.

பிர:—இன்றையதினம் நாங்கள் எழுந்தி ருந்தவேளைநல்லதென்றே நினைக்கிறேன். எங் கள் மகாராஜாவின் அதிர்ஷ்டகாலம் இவ்வி டத்தைக் காண்பித்தது.

மஞ்ச:—எல்லாம் பகவானுடைய செயல். இது கன்யாமந்திரம்; நீங்களிருந்தால் கெடு திவரும்; எழுந்திருங்கள், போவோம்.

மகீந்திரனும், பிரதீபனும் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்தார்கள். மஞ்சரியின் அவசரத்தைச் சொல்ல முடியாது. என்ன செய்வதென்று தோன்றாமல் இவர்களும் எழுந்திருந்தார்கள். மஹீந்திரனுடைய கண்கள் யாரையோ தேடலாயின. அவன் அடியெடுத்துவைக்க முடியாமல் தவித்தான். பிரதீபன் மஹீந்திரன் கையைப் பிடித்துக்கொண்டு மெதுவாய் நடத்தினான். ராஜகுமாரன் நிலைகொள்ளாமல் பிரதீபன்பேரில் சாய்ந்தான். "இதென்ன! ராஜகுமாரன் பலஹீனமாயிருக்கிறான். வெளியிலழைத்துச்செல்ல முடியவில்லையே: மஞ்சரீ! நீஇங்கிருந்து எங்களைவெளியில்அழைத்துப்போவதுகஷ்டமாயிருக்குமே என்னசெய்வாய்" என்றான். மஞ்சரி "இதென்னவிந்தை, வந்தவர்கள் ஏன் திரும்பிச் செல்லாமலிருக்கிறீர்கள். இன்று ஸாயங்காலம் எங்கள் மகாராஜா தேவாலயத்துக்கு வருவார். புத்ரியின்மாளிகையில் தங்குவாரே. நீங்களிங்கிருந்தால் அனர்த்தம் விளையும். பராக்ரமசாலியா யிருந்தாலும் மற்றொருவருடைய கிரகத்தில் தனிமையிலிருப்பது அபாயகரம். பிரதீபகுமாரா! அவருக்கென்ன உடம்பு? நான் தென்புண்டாக மருந்து கொடுக்கிறேனென்று ஒருதங்கப்பாத்திரத்தில் நிர்மலமான ஜலத்தைவிட்டு சாப்பிடும்படி கொடுத்தாள். அதை உட்கொண்டான். சில நேரத்துக்குள் சோர்வு நீங்கிற்று. மஹீந்திரன் சதுரிகே உன் ஸாமர்த்தியத்தை யறிந்தேன். நீ சொல்லுவது யுக்தமேயானாலும் உன்னால் நன்மையும் செய்ய முடியுமல்லவா வென்றான்.

இதற்குள் "மஞ்சரீ," என்று கூப்பிடும் ஓசை கேட்டது. மஞ்சரீ 'சற்று இருங்கள் வருகிறே'னென்று ஓடினாள். இவர்கள் உட்கார்ந்தனர். பிரதீபன் மஹீந்திரனுடைய மனத்தை நன்றாயறிந்தவன். மஹீஸுதை அவ்விடம்வந்தாள். மஞ்சரி மஹீஸுதையின் மனோபிப்பிராயத்தை யறிந்து சும்மாவிருந்தாள். மஹீஸுதை மஹீந்திரனுடைய பூர்வோத்திரங்களைக் கேட்கலானாள்.

"இருக்கட்டும் விட்டேனாபார். ஊம் ஊம் நானோவிடுவேன். இதோ போகிறேன். ஹஉஸ் ஹஉஸ், ஹஉஸ், நன்றாயிருக்கிறது! எத்தனை கஷ்டப்பட்டேன். ஹ, ஹ, ஹ, விடுவேனோ? எளிதில் விடுவேனோ. ஆம், ஆம், ஆம், என் சாமர்த்தியம் யாருக்குத் தெரியும்! பார்க்கலாமே, அப்பா, பெண்குழந்தைகளுக்கு இத்தனை குறும்பா? எனக்கு கோபம் வருகிறது! அவளோடு என்ன பேச்சு. இளிப்பென்ன! நான் அங்கேபோனால் வந்தவன் தடுக்கிறான். இந்தஅரண்மனை யாருடையது? நன்றாயிற்று! வழிப்போக்கனா என்னை யதட்டுகிறவன். நான் எத்தனை சாஸ்திரங்களைப் படித்தேன். மசிசுதையினிடம்தவறாமல்கல்வியை அப்பியசித்தேன். என்னைக்கல்யாணம் செய்துகொள்ளுகிறேனென்று அவள் சொல்லியதாலல்லவோ கஷ்டத்தோடு படிக்கலானேன். மஞ்சரியும் மசிதையும் என்னை முந்தியெல்லாம் அடிப்பார்கள். இரண்டு நாழிகையாய் என்னை யடிக்கவு மில்லை; பாடத்தைக் கேட்கவுமில்லை. நான் சும்மாயிரேன். கட்டிலின்கீழ் ஒளிந்துகொண்டிருக்கையில் கச, குச, தச, பச, வென்று பேசினார்கள். அதென்ன இப்போது அரண்மனைக் கதவை தாளிட்டிருக்கிறார்கள். தட்டத் தட்டயாரும் பேசவில்லை. ஹா ஹா ஹா வென்ற சிரிப்பு. இது என்ன சிரிப்பு. ஸஹிக்க முடியவில்லையே! இனி பொறுக்கமாட்டேன். வருகிறேனென்று சொல்லிப் போனவள் இன்னும் வரவில்லை. அடீ மஞ்சரீ, வாடி, நானேவரட்டுமா? எத்தனைமுறை கூவினேன்! பதிலில்லை" என்று ரகுபதிவந்து பலவிதமாய்ப் பிதற்றி மஹீஸுதை யிருக்குமிடம் சென்றான். மஹீந்திரனும் மஹீஸுதையும் தங்கள் தேசவர்த்தமானங்களைப் பற்றி பேசிக்கொண்டிருந்தனர். பிரதீபன் அவர்களின் ஸம்பாஷணையைக் கவனித்ததுடன் தானும் அடிக்கடி வார்த்தைகளாடுவான். மஞ்

சரி சதுரிகையானதால் அடிக்கடி வெளியே பாராகொடுத்துவந்தாள். ரகுபதி சந்துவுக்கு அனேக ஸமாதானங்களைக் கூறி அவள் தேற்றினுளென்றாலும் அவனை அவ்விடம் வராமலிருக்கச் செய்ய ஸாத்யமில்லாமற் போயிற்று. விலாவெலும்பொடிய மேல் மூச்சுடன் ரகுபதி யோடிவந்தான். மஹீஸுதையினிருப்பைக்கண்டு மனம் தளர்ந்தான். மஞ்சரி அவனைத்தேற்றி "குழந்தாய்! உனக்கு அவர்கள் மஹீஸுதையைக் கல்யாணம் செய்ய ஜாதகம்பார்க்கிறார்க"ளென்றாள். மனம்குளிர்ந்தது ரகுபதி சந்துக்கு. "ஆனால் எப்போது கல்யாணம். இவர்களும் நமது கல்யாணத்திலிருப்பார்களா? ஆனால் நானும் மஹீஸுதையினருகிலுட்காருகிறேன். என் கையை விடு" என்று பறந்தான். மஞ்சரி இதேது இதைக் கட்டியாள கஷ்டமாயிருக்கிறதே. ஏதாவதொருயுக்திசெய்யவேண்டும்: "ரகுபதீ ஜாதகத்தில் நீ செத்துப்போனதாய் தெரிகிறது; நிஜமா பொய்யாவென்று கொல்லைச் சுவரிலுள்ள பல்லியைக் கேட்டுவா" வென்றாள். அவன் ஐயோ நான் செத்துப்போனேனா இனி என்னகதி: மஹீஸுதையை யாராவது கல்யாணம் செய்து விடுவார்களோ வென்று ஓட்டோட்டமா யோடினான். எங்கே பார்த்தாலும் பல்லியைக் காணோம். மறுபடி ஓடிவந்து, மஞ்சரி பல்லியில்லையே நீதான்சொல்லேன்: நான்பிழைப்பேனாவென்றான். மஞ்சரி பல்லி யில்லாவிட்டால் பூந்தோட்டத்திலுள்ள நாயைக் கேட்டுவா வென்றாள். ரகுபதி ஓடி "ஓ நாயே நான்செத்துப்போனது நிச்சயம்தானா" வென்றான். அதுவெள்வெள் லொளலொள்ளென்று குலைத்தது. அதைக்கேட்டும் ரகுபதி சந்திஹோ வென்ற சப்தத்தோடுகூச்சலிட்டுக்கொண்டே ஓடிவந்தான். மஞ்சரி முதலியவர்கள் என்னவென்று வினவ, நாய் தான்செத்துப்போனது உண்மையென்று அழுதது, என்னசெய்வே னென்றான். எல்லோரும் கொல்லென்று சிரித்தனர். மஞ்சரி சிரிப்பை யடக்கி "தம்பீ, நீ தின்னும் நாயைக்கேட்டதால் அதுஅழுதது: பின்பக்கத்திலுள்ள குரங்கைக் கேட்டுவா"வென்றனுப்பினாள். அவன் ஓட்டமாயோடி பர்க்கடராஜனண்டை சென்று நான் உயிரோடிருக்கிறேனாஇல்லையா வென்றான். அது பல்லை யிளித்துக்காட்டி அடிக்கடி கைகளைத் தூக்கி அங்குமிங்கும் நடந்தது. கேட்டால்பேசமாட்டேனென்கிறாயா வென்று அதன் மேல் கல்லை எறிந்தான். அது கோபத்துடன் கட்டியிருந்த கயிற்றை யறுத்துக்கொண்டு ரகுபதிசந்தின்மேல் விழுந்து நன்றாய்க் கடித்து மயிரைப் பிய்த்து ரத்தவெள்ளம் உண்டாக்கிற்று. அதன் கையிலிருந்து தப்பி வருவதற்குள் ரகுபதிசந்துக்கு பிராணன் போயிற்றென்றே சொல்லவேண்டும். குரங்கு கோபத்தோடு உருமிக்கொண்டே யிருந்தது. முகத்திலுள்ள காயங்களோடு ரகுபதி கண்ணீர் சொரிய மஞ்சரியிடம்வந்து தேம்பித்தேம்பியழுதான். இம்முறை மஞ்சரிக்கு பரிதாபமுண்டாய் இனிமேல் அங்கே போகவேண்டாம் நீ வந்தவருக்கு கால்கைகளைப் பிடித்து விசிரிக்கொண்டிருந்தால் உனக்கு சாவில்லையென்று தெரிகிறது; அவ்விதம் செய்யென்றாள். ரகுபதிநோவை மறந்து பங்காக்கயிற்றை யிழுத்தான்; மஹீந்திரனுடைய பாதங்களைப் பிடித்துபசரித்தான். இடையில் தனக்கு சாவில்லையா வென்று கேட்பான் வலிக்கிறதே என்றழுவான். இந்த நரமிருகத்தைக்கண்டு யார்தான் நகையார்கள். மஹீஸுதையின் விநோதார்த்தமாகவே மஞ்சரி ரகுபதிசந்தை போஷித்து வந்தாள். காட்டில் இரண்டு ரமணிகள் ஒண்டியாய்க் காலம் கழிப்பதைவிட ஒரு விநோதப் பிராணி யிருந்தால் மேலல்லவாவென்று யோசித்து ரகுபதியைப் பரிபாலித்தாள்.



## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

(286-வது பக்கத் தொடர்ச்சி.)

சுப்பய்யன் :—அண்ணு தன் சுரூபத்தைக் காட்டாமல் ஏமாந்து நின்றால் இப்படித்தான் இருக்கும். எங்கே என் அண்ணு வெங்கடராமனுத்திலும் பிள்ளை இருக்கிறன். ஒரு பேச்சு ஆட்சேபித்துப்பேசச்சொல்என்றான். நாராயண சாஸ்திரிகள் : என் ! என் வீட்டுப் பிள்ளைகளைப்பாரேன் : அவர்களும் எனக்கு விரோதமாக ஒரு பேச்சுப் பேசமாட்டார்களென்றான். வெங்கடராம சாஸ்திரிகள் : ஒரேழையென்று உபகாரமாக ஒரு வீடு கட்டிக்கொடுத்தால் இது ஒரு ஆட்சேபணமா? எனக்கு முன்னமேயே அவன் பட்டணம் போகும்போது அண்ணுவை மரியாதைக்கு கூப்பிடாமல் பெண்ஜாதி தாயாருடன் புறப்பட்டபோதே தெரியும். சரிதான்! இனிமேல் அண்ணுவை மூலையில் உட்கார்த்திவிட வேண்டியது தான். எல்லாம் இராமச்சந்திரய்யர் அதிகாரம்தான் என்றார். காமேசுவரய்யருக்கு இராமச்சந்திரய்யர்மீது கோபம் பொறுக்க முடியவில்லை. இந்த ஆலோசனை யெல்லாம் ஆனபிறகு காமேசுவரய்யர் இராணியினுடைய மீடிங்குக்குப் போனர். காமேசுவரய்யர் தினந்தோறும் தன்னுடைய ஆலோசனைகளை இராணி தங்கத்தினிடம் போய்சொல்லாமல் இருக்கமாட்டார். ஊரில் அநேகருக்கு தங்கம் காமேசுவரய்யருக்கு என்ன வசியமருந்து இட்டாளோ என்று சந்தேகம். அவளிடத்தில் போய்ச்சொன்னதும் அவளும் இராமச்சந்திரன் மீதும் அவன் தாயார் மீதும் இல்லாத தோஷங்களை யெல்லாம் கற்பித்து காமேசுவரய்யருக்கு கோபம் மூட்டினள். கவனத்தில் பெயர் பெற்ற கம்பனுக்குக்கூட தங்கத்தைப் போல் ஒரு நிமிஷத்தில் ஒரு சங்கதி கவனம் செய்யமுடியாது. இப்படியிருக்க காமேசுவரய்யருக்கு பெருத்த கடனை ஐயாயிரம் ரூபா கொடுத்திருந்த ஒருவர்வந்து சேர்ந்தார். அவர் வந்த தினமே தங்கத்தின் புருஷன் ஸ்ரீநிவாச சாஸ்திரிகளும் வந்து சேர்ந்தார். கடன் கொடுத்தவர் காமேசுவரய்யரைக் கண்டித்தார். காமேசுவரய்யர் இராமச்சந்திரனைக் கண்டித்தார். இராமச்சந்திரன் இதற்குள் காமேசுவரய்யர் குடும்பத்தை கவனியாத ஊழலெல்லாம் கண்டுவிட்டான். காமேசுவரய்யர் சொத்தில் பொறுப்பில்லாதவர். அவருக்கு மந்திரிகளும் எல்லோரும் போக்கிரிகள். இன்னும் கொஞ்ச நாளையில் அவரை இன்ஸால்வெண்டு செய்துவிடுவார்கள். இராமசந்திரனுக்கோ காமேசுவரய்பரை ஸ்தோத்திரம் செய்யப் பிடிக்கவில்லை. இவனுக்கு அந்தரங்கமாக காமேசுவரய்யர் மீது பிரியம் உண்டு. அதனல் அவனுக்கு மனஸ்தாபப் படவும் பிரியம் இல்லை. மனஸ்தாபம் இல்லாமலும் காரியம் ஆகாது. கடனை ஒப்புகொள்ள மாட்டேனென்று ஆக்ஷேபிக்க இதுதான் சமயம். இப்போது ஒப்புக்கொண்டால் பாதி கடனை நம்மிடத்தில் தள்ளிவிட்டு பிறகு மனஸ்தாபத்தைக் கொண்டுவந்து பிரிக்க வேண்டுமானல் அப்போது கடன்தான் மிச்சமாகும். அதினும் சொத்துக்கு மீறி கடன் வைத்துவிட்டால் என்ன செய்கிறது! என்று யோசித்து இராமச்சந்திரய்யர் பூமியை விற்றுக் கடனை அடைத்தால் ஒழிய நான் கையெழுத்து என்பது போடமாட்டேனென்று சொல்லிவிட்டார். காமேசுவரய்யருக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. இராமச்சந்திரய்யர் பார்த்தார்! இனி தாக்ஷண்யம் வைத்து சரிப்படாதென்று நீங்கள் குத்தகையை ரத்துசெய்து பூமிகளை விற்று கடன்களை அடைத்தாலொழிய உங்கள் கடனையே நான் ஒப்புக்கொள்ள மாட்டேனென்றார். காமேசுவரய்யர், நல்லது இனி நீ தனியாக இருக்கலாம் ; என்னுடன் இருக்க வேண்டாமென்றார். இராமச்சந்தி

ரய்யர் ரோசமுள்ளவராதலால் அன்றைய தினமே தனியாக விலகி உடனே கடன் வாங்கி பாகவியாஜ்யம் போடுவதாகத் தீர்மானித்தார். இராமச்சந்திரய்யர் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளிடம் சொல்லி காமேசுவரய்யருக்கு நல்ல புத்தி சொல்லச் சொன்னார். ஸ்ரீநிவாஸ ஸாஸ்திரிகளை தங்கமும் நாராயண சாஸ்திரிகளும் அடக்கி அவர் மனதையும் கலைத்து விட்டார்கள். வெங்கடாராம சாஸ்திரிகள் முதலிய எல்லோருக்கும் இராமச்சந்திரய்யர் பாகவியாஜ்யம் போடப்போகிறாரென்பதைக் கேட்க வெகு சந்தோஷம். காமேசுவரய்யரிடம் நல்ல கொள்ளை அகப்படும் என்று வெகு சந்தோஷப் பட்டார்கள். காமேசுவரய்யரும் கடன் வாங்கி பாகவியாஜ்யத்தை எதிர்த்து இராமச்சந்திரனுக்கு ஒன்றுமில்லை யென்று அடிக்கிறதென்று தீர்மானித்தார். வியாஜ்ஜியம் வெகு மும்முறமாய் நடந்தது. இருகட்சியிலும் சேர்ந்து அந்த ஊரில் ஒருவரையாவது விட்டு வைக்கவில்லை. தினந்தோறும் ஒவ்வொரு கட்சியிலும் சாட்சிக்காரர் வந்தவர்கள் எல்லோருக்கும் 'சப்ளை' ஒரு சமாராதனைபோல் நடந்தது. சாட்சிக்காரர்களுக்கெல்லாம் வெகு சந்தோஷம். இப்படிப்பட்ட வியாஜ்ஜியம் தினந்தோறும் நடந்தாலும் நமக்கு பாதகமில்லையப்பாவென்று சொல்லிக்கொண்டார்கள். காமேசுவரய்யருடைய சாட்சிகளெல்லாரும் பொய்சாட்சிகள். இதில் முக்கியமான சாட்சிகள் வெங்கட்டராம சாஸ்திரிகள், நாராயணசாஸ்திரிகள், சுப்பய்யர் மூவருமே. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளும் காமேசுரய்யருக்கு சாட்சியாக வந்தார். ஆனால் அவர் பொய்யொன்றும் சொல்லாமல் தப்பித்துக் கொண்டார். வெக்கட்டராம சாஸ்திரிகள் நாராயணசாஸ்திரிகள் சுப்பய்யன் ஒவ்வொருவரும் தங்களுக்கு காமேசுவரய்யர் மூவாயிரம் நாலாயிரம் ஐயாயிரம் இப்படித் தொகை கொடுக்கவேண்டுமென்று பத்திரம் கொண்டு வந்து ஆஜர்ப்படுத்தினார்கள். குடும்ப கடன்களெல்லாம் இராமச்சந்திரய்யர் படிப்புக்காகவே கொடுக்கப்பட்டதென்றும் பூர்வீக கடனும் இருந்தது என்றும் சொன்னார்கள். மற்ற சாக்ஷிகள் காமேசுவரய்யர் கல்யாணம் செய்ததையும் தங்கத்துக்கு சீர்வரிசை செய்ததையும் நகைகள் செய்து போட்டதையும் சொன்னார்கள். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளும் அதைத்தான் சொன்னார். இராமச்சந்திரய்யருக்கு அந்த ஊரில் பணக்காரர்கள் தகுந்தவர்கள் எல்லோரும் சாட்சியாகவந்து உண்மையைச் சொன்னார்கள். வெங்கட்டராம சாஸ்திரிகள், நாராயண சாஸ்திரிகள், சுப்பய்யன் இவர்கள் கடன்பத்திரம் எல்லாம் மோசடியாக வாங்கிவைக்கப்பட்ட பழய பத்திரங்களில் எழுதப்பட்டன வென்றும் தங்களுக்குச்செய்த சீர்வரிசைகளெல்லாம் இராமச்சந்திரய்யருக்கு சம்மதமில்லை யென்றும் சுப்பய்யன் குத்தகையும் இராமச்சந்திரய்யருக்கு சம்மதமில்லை யென்றும், காமேசுவரய்யரால் எல்லா கடனும் வாங்கப்பட்டன வென்றும், பூர்வீககடனே அந்தக் குடும்பத்துக்கு இல்லையென்றும் சாட்சிகளால் ஏற்பட்டது. கேஸ் அதிகமாக இழுத்து அடிக்கடி ஒத்தி போடப்படாமல் உடனே எடுக்கப்பட்டது. காமேசுவரய்யர் சாட்சிகளெல்லாருக்கும் கேஸை அதற்குள் எடுத்து விட்டார்களே என்றும், தாங்கள் நிர்விசாரமாய் சமாராதனை சாப்பாடுபோல் சாப்பிட்டுவிட்டு சீட்டுஆடிவிட்டு 'டிபின்' முதலியது சாப்பிட்டு சுகமாயிருந்ததெல்லாம் போச்சே என்றும் வருத்தப்பட்டார்கள். கடைசியில் கேஸ் முடிந்து கடன்களெல்லாம் காமேசுவரய்யர் கொடுத்துக்கொள்கிறதென்றும், மகாதேவய்யர் இறந்தகாலத்தில் இருந்த சொத்துக்களில் கால் பங்கு இராமச்சந்திரய்யருக்கு கொடுக்கவேண்டியதென்றும், இராமச்சந்திரனுக்கு செலவு தொகை இரண்டாயிரம் ரூபாய் கொடுக்கவேண்டுமென்றும் தீர்மானம் ஆயிற்று.

இதே சமயத்தில் இராமச்சந்திரய்யருக்கு பி. ஏ. பரிக்ஷைதேறினதாகவும் சமாசாரம் வந்தது. பிறகு காமேசுவரய்யர் இராமச்சந்திரனுக்கு சொத்துகளைப் பிரித்துக் கொடுத்தார்.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி.ஏ.



## "SPEAK THE TRUTH AND SHAME THE DEVIL."
OR
## "GIVE UP THY EGOISM AND KNOW THE TRUTH."

## "அகங்காரத்தை விட்டொழித்தால் அறிவீர் நீர் அதிசயத்தை." *

"ஸத்யம்வத:"—"வாய்மையாலஹம் தூய்மையாம்."

ஒருண்மையான உள்ளனுபவம்.

---

"The sun can give light and heat to the whole world, but it can do nothing when the clouds cover the earth and shut out its rays; similarly, so long as egoism covers the soul, God can do nothing."—*Sri Ramakrishna Paramahamsa.*

பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருவாய்மலர்ந்தருளிய உபதேசத்தில் ஒன்று பின்வருமாறு:—

"சூரியன் உலகனைத்துக்கும் ஒளிகொடுத்து உஷ்ணத்தையும் கொடுக்கவல்லது என்பதிற் சந்தேகமில்லை. ஆனல் உலகத்தை மேகங்கள் கவர்ந்து கொண்டிருந்தால் சூரியன் வெளிச்சமும் வெப்பமும் கொடுக்கமுடியுமோ? முடியாது. அதுபோல, ஜீவாத்மா அகப்பேயால் மூடப்பட்டிருக்கையில் கடவுளால் கிருபை சாதிக்கமுடியாமற் போகிறது."

"ஆகையால் அகங்காரத்தை விட்டொழிக்கவேண்டும்." "அகங்காரத்தை விட்டொழிக்கவேண்டும்", என்றால் என்ன? "அகங்காரம்" "நான்" என்று நினைக்கிற நினைவு, இந்த நினைவு அழிந்தால் தேஹம் ஒரு நிமிஷமும் நில்லாது. தேகம் முளைத்ததே இந்த அகங்கார வித்திலிருந்துதான். "அகங்காரம்" என்பது ஸ்தூலபாவம். அஹம் தத்துவம் என்றும் அழியாதது. "அஹம் தேஹம்" என்னும் பாவம் அழியத்தக்கது; ஏனென்றால் தேஹம் அழியத்தக்கது. தேஹம் அழியும்போது அஃதோடு ஐக்கியம் கொண்டாடிய "பாவமும்" அதாவது "நினைவும்" அழியும். ஆனல் அந்த தேஹம், பாவம் இரண்டுக்கும் காரணபூதமான அஹம்தத்துவமுண்டே அது அழியாதது. கடவுளின் ஒரு அம்சமாயிருக்கிறபடியால் அஹம்தத்துவத்துக்கு அழிவில்லை. "அஹம் பிரஹ்மாஸ்மி" என்கிற மஹாவாக்கியத்தின் ஸ்வானுபவம் சித்திக்கிறவரையில் அந்த அஹம் தத்துவம் அதிலிருந்துண்டான ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமான தேகங்களிடத்து தாதாத்மியமாய் ஐக்கிய பாவம் கொண்டாடிநிற்கும். அப்படியிருக்க, அந்த அஹம் தத்துவம் அதற்குக்காரணமாயுள்ள பிரம்மத்தில் ஒடுங்குவதேயதற்கு அழிவாம். ஜீவன்பிரம்மமாய் விட்டால் செயல் என்பது அற்றுப்போய்விடும். செயலற்றுப்போனல் உலகமும் அற்றுப்போம். ஏனென்றால் உலகம் யஜ்ஞத்திலிருந்து உண்டானது: யஜ்ஞத்தினல் (கர்மத்தினல்) நடைபெற்று வருகிறது. ஆதலால் அகங்காரத்தை விடவேண்டு மென்றால், அஹம்தத்துவத்தை விடவேண்டு மென்பதல்ல: ஆனல், நான் வேறு, தெய்வம் வேறு என்று நினைக்கும் பேதபாவனையை விடவேண்டு மென்பதே: ஏனென்றால், இந்த பேதஞானமே மாயா பிரபஞ்ச விர்த்திக்குக் காரணம். உண்மையாகவே பார்த்தால் கடவுள் வியக்தாவ்வியக்தஸ்வரூபியாயிருக்கிறார். தோற்றப்படும் பிரபஞ்சமானது அவருடைய் வியக்தஸ்வரூபமாக் யிருக்கிறது. சூத்திரதாரி திரைக்குள்ளிருந்து பொம்மையை ஆட்டுவதுபோல் ஆட்டிவைப்பவர் அவியக்தபிர

---

* ஆனந்தத்தாய்மொழி.

ம்மன். அவர் காணக்கூடாதவராயிருக்கிறார். தேஹமும் உலகமும் பொம்மைகளைப்போல் ஜடவஸ்து. அவற்றிற்குத்தானாக அசையும் சக்தியில்லை; அறிவுமில்லை. இந்த பொம்மைக்கும் சூஸ்திரதாரிக்கும் இடையிலிருக்கும் சூஸ்திரம் அல்லது கயிறுக்கு ஒப்பானது என்னவென்றால், அதுதான் மனம் என்று சொல்வது. அந்தமனம்தான் சூக்ஷ்மாகங்காரம். சேதனனான (அறிவுள்ளவனான) மனிதன், "நான்சேதனன்" அதாவது "அறிவுரூபமாய் விளங்குவோன்" என்று நினைக்காமல், அசேதனமான சூஸ்திரம் (கயிறு) நான், பொம்மைபோன்ற தேஹம் நான் என்று நினைப்பானேல், அந்த நினைவினால் அறிவுமயமான அவன் அசேதனமான (மூடமான) சூத்திரம் (கயிற்றுக்கொப்பான மனசு), பொம்மை (தேஹம்) இவற்றோடு ஏகீபாவமடைந்து, அவையளவேயாகக் குறுகிவிடுகிறான். அதெப்படியென்றால் எங்கும் நிறைந்த ஆகாயத்தை ஒருவீடுகட்டி அதில் வைத்து மடாகாசம் என்று காப்பதுபோலும், ஒரு குடத்தை வனைந்து அதில்வைத்து கடாகாசம் என்று காப்பதுபோலுமாம். மடத்திலும், கடத்திலுமுள்ள ஆகாசம் அதன் எங்கும் நிறைந்த தன்மையால் வீடுகட்டுமுன்னும், வீடு அழிந்தபின்னும், அப்படியே குடம் வனையுமுன்னும், குடமுடைந்தபின்னும் இருந்தாலும், அந்த ஆகாசம் மடத்துக்குள்ளும் குடத்துக்குள்ளும் இருக்கிறதாக பாவிக்கிறபாவனையினாலே மடாகாசம் கடாகாசம் என்கிற பேருண்டாகிறது. அதுபோல தேஹம், மனசு இவைக்கும் சேதனன் "நான்தேஹம்" "நான் மனசு" என்று நினைக்கிற பாவனையினாலேயே ஒருவித சக்தியுண்டாகி, அது ஸர்வவியாபகமான அஹம்தத்துவத்தின்வியாபகத்துவத்தை மறைக்கிறது. இப்படிமறைப்பதொன்றெதுவோ, அதற்கு ஆவரணசக்தி யென்றுபேர். இந்தமறைவைத் திரையாகக்கொண்டு இதில் பொம்மலாட்டத்தைப்போன்ற ஜீவநாடகத்தைப் பிரபஞ்சமாயாவிலாசமாகத்தோற்றுவிப்பது எதுவோ அது விக்ஷேப சக்தி. இந்த ஆவரணம், விக்ஷேபம் இரண்டும் சேர்ந்தது மாயை என்று சொல்லப்படுவது. இந்தமாயையின் விலாஸமே விலாஸம். இப்பொழுது இந்த உண்மைகளை விளக்க நாமறிய நடந்ததோர் அதிசயத்தைக் கதையாகச்சொல்வோம்.

ஒரு தியானயோகி யோகத்திலிருந்து "அஹம்பிரம்மாஸ்மி" யென்கிற மஹாவாக்கியத்தியானம் செய்துகொண்டுவந்தான். தியானம் முதிரமுதிர இவனது இந்திரியக் கூட்டங்கள் ஆகாயத்திலிருந்துதிரும் நக்ஷத்திரங்களைப்போல் இவனைவிட்டு நீங்கலாயின. இந்திரியங்கள் இப்படி ஒன்றொன்றாய் உதிர்ந்துபோகவும் அந்தயோகி இந்திரியங்களுக்கெல்லாம் காரணமான மனசே இந்திரியமாகி அனுமாரைப்போல் ஆகாசகமனம் முதலிய அட்டகாசங்கள் செய்து திரிந்தான். இப்படி இருக்குங்காலையில் இந்த அபூர்வ சக்திகளாலும் சஞ்சலமேயன்றி அவனுக்கு விச்ராந்தி தோன்றாமைகண்டு, அப்பிராணனுக்காதாரமான மனதை விளித்து அதை விவேகத்தால் கட்டி நிறுத்தி, நீயும் அந்த பிரம்மஸ்வரூபமேயென்று அதற்கு "தத்துவமஸி" யென்னும் ஸாமவேதமஹாவாக்கியத்தைப் போதித்துவர, அந்த உபதேசம் பலித்து மனமும்விஸ்ராந்தியடைந்து அறிவுமயமாய் பிரகாசிக்கலாயிற்று. இப்பொழுது பூர்வ வாசனையின் காரணத்தால் இந்தப்பிரபஞ்சமாயை அவனுக்குமுன்வந்து தோற்றி, அவனைப்பலவித யோசனைகளிலிழுக்க யத்தனித்தது. அறிவுமயமாய் விளங்கிய ஆத்மன் எதிர்ப்பட்டமாயையை மித்தையென்று தள்ளாமல், அதை ஏவல்புரியும்படி செய்ய, அதிசய அதிசயமான அபாரகாரியங்களெல்லாம் அவன் இச்சாமாத்திரத்தால் நிறைவேறக்கண்டு அதிசயித்து நின்றான். இதுதான் சமயமென்று அந்த மாயாசக்தி மோஹனாஸ்திரத்தைவிட்டு அவனைக்கட்ட,

அவன் அதில் சிக்கிக்கொண்டான். அதாவது அந்தக்கரணவாசனை "மழைகாலத்துப் பனிபோல்" தடித்து மோஹமாக மாறிற்று. மோஹம் தடிக்கவும், சேதனன் தன் அறிவொளி மழுங்கவும் ஒருவிதமயக்கம் மேலிடவும் கண்டான். இப்படி அறிவு கலங்கவும் அவன் அனுபவித்துவந்த சுகம் குறைவுபட, அது பொறுக்காமல், மழைமுகம் காணுப்பயிரேபோல்வாடித் தாய்முகம் காணுச் சேயைப்போல் தவித்தழுதான். உடனே அவன் அழுகைக்கிரங்கி ஈஸ்வரன் ஓர் திவ்வியமான தேஜோ ரூபங்கொண்டு சித்த புருஷனாக அவனுக்கு தரிசனம்கொடுத்து அந்தக்கரணவாசனையையும் கெடுக்கவேண்டுமென்று அனுக்ரஹித்து அதற்கான ஸாதன வகையையும்உபதேசித்தருளினார்.

அந்தக்கரண வாசனையைக் கட்டுவான் அந்தச் சீலபுருஷன் மறுபடியும் அகோர தபஸ்புரியலானான். தானும்பிரம்மமாய்த்தன் மனஸும் பிரம்மமயமான பின்னும், தன்னை மயக்குவது மாயாப்பிரபஞ்சமொன்றே யாதலால், தனது அந்தக்கரணவாசனையிலிருந்துதிக்கும் அம்மாயாப் பிரபஞ்சத்தை 'தீக்ஷ்ணதரிசியாயிருந்து நோக்கி' அதுஉண்டான கிரமத்தையுணர்ந்து சித்தபுருஷன் தனக்குபதேசித்ததினுண்மையை உள்ளபடி அனுபவித்தறிந்து, ஆதிமுதலுள்ளதால் "ஆதி" யென்கிற காரணப்பெயர்பெற்ற அந்த அந்தக்கரணவாசனையைக் கெடுக்குமாறு தன்னைச்சுற்றியுள்ள மாயாப்பிரபஞ்சத்தை அருட்கண்ணால் நோக்கி, இந்தக் காணுப் பிரபஞ்சமெல்லாம் பிரம்மமேயென்று திடமாகத்தியானம்செய்தான். நாலாவது மஹா வாக்கியமான "அயமாத்மா ப்ரஹ்மம்" என்பதின் அனுபவமும் சித்திக்க, அலைபற்ற சமுத்திரம்போல அவன் உள்ளும் புறமும்சலனமற்று சாந்தோபசாந்தனாய் எல்லாவற்றிற்கும் சாக்ஷிமாத்திரமாயுள்ள சின்மாத்திரஸ்வரூபமாய் அமர்ந்து நின்றான். திரிசயமெல்லாமற்று திரிக்குமாத்திரமாய் நின்றான். பார்க்கப்படும் பொருளின்றி பார்ப்பான்மாத்திரமாக நின்ற மஹாதீரனான யோகியின் சமாதிமுதிர்ச்சியில் ஆரூடதசைகிட்டுங்காலத்தில் அந்தப்பார்ப்பானுமற்று சுத்தப்பார்வை மாத்திரமாக நின்றான்.

"அறிவானும் அறிபொருளும் ஒன்றேயாக"த் திரிபுடிஞானம் நழுவிப்போய் அறிவு மயமாய் விளங்கினான். அப்பொழுது அவயவங்களுக்கும் அவயவிக்கு முள்ளதோர் தாதாத்மிய சம்பந்தப்பிரஜ்ஞையும் நழுவிப்போக நிரவயவியாகி கேவலம் அஸங்கனாயிருந்து விளங்கினான்.

* * * *

ஹிருதய கமலத்திலுள்ள பிராணன் நிசுவாஸரூபமாய் பகிர்முகமாகப் பிரவிருத்தித்து வந்ததானது, பிராணாயாமபிரத்தியாஹார சித்திபெற்று, தாரணத்தியானசமாதிரூப யோகஸம்யமத்தில் திடமாகநின்று அப்பியசித்து வருகையில், அஹமுகமாகத் திரும்பி மூலாதாரத்திலுள்ள "ஆந்தரவேஷ்டணிகா" வென்னும் முக்கிய நாடியிலுள்ள குண்டலிநிசக்தியின் ஆகர்ஷணையினால் அவ்விடத்தையடையலாயிற்று. ஹிருதயகமல மத்தியிலுள்ள பிராணன் மூலாதாரத்தில் குண்டலிசக்தியோடு சம்பந்தப்படவும், அபானன் உடனே அதைச்சேர்ந்து மேலெழவிட்டாமல் தடுத்தது. பிராணன் மேலேயிழுக்க அபானன் கீழேயிழுக்க இவ்விருவித இயக்கத்தின் சேர்க்கையால் மதனம் செய்யப்பட்ட பிராணசக்தியிலிருந்து பிராணபானஐக்கியஸ்வரூப வியானன் உண்டாயிற்று. அரணிக் கட்டைகளைக்கடைவதினாலுண்டாகும் அக்னியைப்போலுண்டான இந்நூமின் சக்தியின் பிரவாஹத்தால் அங்கே தூங்கிக்கொண்டிருந்த குண்டலிநிசக்தியானது கண் விழிக்க, அதன்சிறலினால்பிராணசக்திமேலே

யிழுக்கப்பட உதானன் பிறந்தது; கண்டத்தையடைந்து வாயுமண்டலத்தைச் சேரவும் அது சமானனுகப் பரிணமிக்கலாயிற்று. இப்படி பஞ்சப்பிராணனுகப் பரிணமித்து தேகத்தைத் தாங்கிவரும் பிராணசக்திகள் ஐந்தும் பஹிர்முகப் பார்வையற்றகாரணத்தால், வெளிப்போக்குக்கு இடமின்றி தேஹத்துக்குள் தானே வட்டமிட்டுவர, அவற்றின் சஞ்சாரத்தாலுண்டான மின்சார ஓட்டம் போன்ற பிராணசக்தி தேஹத்தில் விர்த்தியாகி அபரிமிதமாகவளர்ந்து அன்னமயமான தேகத்தைப் பிராணமயமாக மாறச்செய்தது. பிராணசக்தியின் வேகத்தால் குண்டலிப்பாம்பு துயில்நீங்கித் தலையெடுத்தாட ஆரம்பித்தது. படமெடுத்தாடும் பாம்பு எப்படி வாயுபந்தனம்செய்து தரையிற்புரண்டு நெளியும் தன் தேகத்தை மேலும் மேலும் ஆகாயத்தில் தூக்கிநிறுத்தி, எடுத்தபடம் எடுத்தபடியிருக்க ஆடிக்கொண்டே மேலெழும்புகிறதோ, அப்படிப்போல, துயில் நீங்கின குண்டலிப்பாம்பும் பிராணபந்தனம் செய்து மேலெழுந்து ஆடிக்கொண்டே மும்மண்டலங்களையும் தாண்டி தன்னந்தனியே தனித்திருந்து அசையாமல் நின்று ஆடியது. இது எப்படியென்றுகேட்கின் சொல்லமுடியாது. ஆனுல் தேவாலயதரிசனத்தில் பக்தி சிரத்தையுள்ளவர்கள் திருவாரூரில் தியாகராஜர் நிருத்ததரிசனம்கண்டு மகிழ்ந்து அவரது கிருபையால் அந்நிருத்தத்தின் உண்மையை உணரக்கூடுமாயின் சிலாக்கியமே.

ஓம்: ஸ்ரீ தியாகராஜர் திருவடிகளே சரணம்.

பிராணமயமாய் இயங்கிய தேஹத்தைப் பாம்பு விழுங்கவும் (குண்டலியின் வாயுபந்தனத்தால்) பிராணமயமாய் (இயங்கும் சக்தி ஸ்வரூபமாய்) விளங்கியதேஹம் மனேமயமாகமாறியது. மனேமயரூபமாய் விளங்கும் இந்தக் குண்டலினிசக்தியென்னும் பாம்பு விஷ்ணுவுக்கு சர்ப்பசயனமாய் விளங்கும் ஆதிசேஷன் என்னும் பாம்பாம். இதுமூலாதாரம் தொட்டு ஸஹஸ்ராரம் வரையில் எல்லா ஆதாரங்களையும் ஊடுருவி நிற்பதால் ஆயிரந்தலையுடைத்தாய் உலகனைத்துக்கும் ஆதாரமாக நிற்பது இதுவே. இந்த ஆயிரந்தலையுடைய ஆதிசேஷனே அந்தக்கரணவாசனையின் ஸ்வரூபம். இந்தவாசனையை அடக்குதற்குவேண்டிய அப்பியாஸம்தான் இப்பாம்பை ஆட்டுதலாம். அந்தக்கரணவாசனையை அடக்கிக்கட்டவல்லவனே பதினெண்சித்தர்களில் பேர்போனவரான "பாம்பாட்டிச் சித்தன்." இந்த ஆதிசேஷன் முடியிலுள்ள மணியே ஜோதிரூபமான தேஜோமனஸ். "அந்தக்கரணம்" என்பது இதனுள் விளங்கும் ஜோதி. "பாம்பின்கால் பாம்புக்குத்தெரியும்" என்கிற பழமொழிப்படி அந்தக்கரணவாசனை அந்தக்கரணமாத்திரமாகி நின்றவர்க்கே தெரியும். இந்த வாசனையைக்கெடுத்து மனேலயம் உண்டுபண்ணி விச்ராந்தியடைவதே எம்பெருமான் திருவரங்கத்தில் ஸர்ப்பசயனத்துத் திருப்பள்ளி கொண்டிருக்கும் திவ்ய காக்ஷியாம். இக்காக்ஷியைக் கண்டனுபவித்தவரே கிரதார்த்தராவர். மற்றவர்களெல்லாம் கர்மவலையிற்பட்ட மீன்களேயாவர். பிராணுபானனுடைய இயக்கரூபசலனம் நீங்கி நிச்சலனம் சித்திக்கும்பொழுது அவயவம் அவயவி யென்கிற தாதாத்மிய சம்பந்தஸ்மிருதியும் நழுவிப்போகும். அப்பொழுது கால்கைகளெல்லாம் அற்று விழுந்துபோவது போலும் உணர்ச்சி தோன்றி முதிரும்.

இந்த அவயவஅவயவிரூப. தாதாத்மிய சம்பந்தமும் நழுவிப்போங்கால், மனமும் நழுவிப்போம். அப்பொழுது எம்பிரான் திருவரங்கத்தில் ஸர்ப்ப சயனத்தை விட்டெழுந்து குண்டலிப்பாம்பின் சக்தியை விழுங்கும் கருடன்மேல் ஆரோஹணம் செய்து, கருடவாஹனுரூடராய் சிதாகாசவெளியில் ஓடாமலோடி வையாளிவிட்டுத் தம் பக்தகோடிகளுக்குத் தரிசனமளித்து அவர்

களை ஆனந்தவெள்ளத்தில் அமிழ்ந்துகிடக்கச்செய்வர். இப்படி கருடவாஹனாரூடராய் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோலமே மஹாயோகிகளும், மஹா சித்தர்களும் "ஆரூடசமாதியாயிருந்தனுப்வித்தல்" எனும் அளவுகடந்ததோர் ஆனந்தசுகம். அந்த சுகத்தை அனுபவித்தறியவேண்டுமேயன்றி வாக்கால் மனதால் வெளியிட்டுச்சொல்லல் முடியாது. "அறிவழிந்த சுகமதனை யனுபவித்தே யறியவேண்டும்" என்பது ஆனந்தத்தாய்மொழி. இந்த அனுபவத்தின் முன்னே மாயாசகிதமாய் அனுபவிக்கும் ஆனந்தமும் சித்திவல்லபங்களும் மிகவும் வஸ்ரயறைக்குள்பட்டதோர் சின்ன அளவுள்ளதாகவிருக்கும். அளவுகடந்த சுகம் அனந்தசயனத்திலிருந் தனுபவித்தாலும் கருடவாஹனாரூடராயிருந் தனுபவித்தாலும் ஒன்றே. ஏனெனில் மாயாரஹிதமான அந்த ஆரூட நிலையில் செய்கை-செய்யாமையென்கிற பேதமே யற்று விளங்குதலால் இரண்டும் ஒன்றே. அந்த நிலைகடந்ததோர் நிலையில் "அஹம்பாவம்" வேரோடு களையப்பட்டு, "அஹம்பிரஹ்மமாகவே விளங்குதலால்" ஸர்வம் பிரஹ்மமயமான அந்த நிலையில் எல்லாம் அந்த பிரம்ம ஸந்நிதான மாத்திரத்தினாலே தத்தம் தர்மவழிப்பட்டு நடக்கும். "அருக்குள் உருவாய் நிற்கக்கற்றால் அனந்தம் சித்தியாடலாமே." என்பது சித்தர் வாக்கு. பின்னும் அந்நிலையில், "ஆடலாம் பாடலாம் அருள் விளையாடலாம், கூடலாம் ஊடலாம் கூடுவினை யறுக்கலாம், ஓடலாம் விடலாம் ஒன்றும் செய்யாதிருக்கலாம், ஏடலாத ஏட்டிலுள்ள எழுதாக்ஷரம் வாசிக்கலாம்." என்பது சித்தர் வாக்கு. இந்த உண்மையை சித்தமூர்த்தியாக வந்துபதேசம் செய்து விளக்கியவர் பின்வரும் உபதேசத்தில் திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார். ஈம் என்பது மாயாபீஜமாதலால், 'இம்மா' என்பது மாயா ஸஹிதமான சித்தி முத்தியைக்குறிக்கும். ஒருமா, என்றால் 'ஒரு அளவையுள்ளது. அளவுகடந்ததல்ல' என்றபடி.

"இம்மா ஒருமா போடாபோ!
இம்மதிலே உறுஉறுமு.
அம்மா அப்பா இரண்டாச்சு.
அகார உகாரம் பாழ்போச்சு.
சும்மாவிருக்க இடமில்லையே.
சுருதிமுடிந்த இடம்சொல்லொணாதே!"



## SANATANA DHARMA—METHODS OF WORSHIP.

### சநாதன தர்மம்

### உபாசனை.

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

"அர்ஜுநா! ஸர்வ பூதங்களையும், தன் ஸங்கல்பரூபமாகையாலே, 'யந்த்ராரூடானி' என்று யந்த்ரரூப சரீரத்திலேவைத்து பிரமியாநிற்பானான ஈச்வரனானவன் ஸர்வபூதங்களுடையவும் ஹிருதயப்பிரதேசத்திலே நிற்கும்."

"பாரதனே! ஸர்வப்பிரகாரத்தாலேயும் அவனையேயடைக; அவன் பிரஸாதத்தாலே (அவனருளால்) பரையான சாந்தியையும் சாச்வதமான நல்ஸ்தானத்தையும் (பதவியையும்) நீ பெறுவை."

"ஸர்வமதங்களையும் விட்டு என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று; நான் உன்னை ஸர்வபாபத்தினின்றும் விடுவிப்பேன். நீ சோகியாதே: ஸ்திரியங்கொள்."

இப்படி பரமாசாரியராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுநனுக்கு கீதாசாஸ்திரமுழு

வதையும் ஓதி யுரைத்தும் முடிவில் "எல்லா அறங்களையுமிங்கறவிட்டென்னையே நல்லார் சரணமாய் நண்ணியிடு" என்று ஸர்வபாபத்தினின்றும் விடுபடுவதற்கான உபாயத்தை அவனுக்குக்கூறி அபயஸ்தமும் கொடுத்தார். பாற்கடலைக் கடைந்தெடுத்த அமிர்தம்போல் வேதசாஸ்திரங்கள் உபநிஷத்துக்களை யெல்லாம் ஒன்றாகக் கொட்டிக் கடைந்தெடுத்த அமிர்தத்துக்கொப்பானது மன்னுயிர்க்கெல்லாம் நிலையானநன்மை பயக்குவதாகிய ஒப்புயர்வற்ற மோக்ஷ சாஸ்திரமாம் பகவத்கீதை.

அந்த பகவத்கீதையை புருஷோத்தமனை ஸ்ரீ கிருஷ்ணபகவான் உத்தம சிஷனும், தனக்கு மிக்கப் பிரியனுமான அர்ஜுநனுக்கு ஐயந்திரிபற ஓதியருளியும் கடைசியில் அவன் சோகந்தீர்க்க வழியாக, "ஸர்வதர்மங்களையும் விட்டு என்னை ஒருவனையுமே உபாயமாகப்பற்று" என்று அவனுக்கு உபாசனைமுறையை கடைப்பிடியாகப் பிடிக்கும்படி உண்மையாக உபதேசித்தருளினர். ஆகையால், தாபங்களினலே தஹிக்கப்பட்டுத் துன்புற்ற மாந்தர்க்கு உய்யும் வழி உபாசனையே. உபாசனையைப்போல் கைகண்ட ஸாதனை வேறில்லை. ஆனதுபற்றி இந்த உபாசனையைப்பற்றி இதன் கருத்து என்னவென்று சற்று விசாரிப்போம். எவ்வளவுதான் ஒருவன் விசாரம் செய்யினும், என்னதான் தத்துவாராய்ச்சி செய்திடினும் உபாசனையாலன்றி வேறுவிதமாக அவனுக்கு இலகுவில் ஸ்வானுபவம் சித்திப்பதில்லை. தத்துவவிசாரம் புத்தி கூர்மையைமட்டும் உண்டுபண்ணும். உபாசனையொன்றே சாக்ஷாத்காரமளிக்கும். ஆதலால் தத்துவவிசாரத்திலும் உபாசனை மிக முக்கியமானது. மேலானதென்றும்சொல்வோம். "உபாசனை" யென்றால் என்ன? பிரஹ்மஸ்ரீ ப. நாராயணய்யர் பிரசுரித்திருக்கும் "சநாதனதர்மம்" என்னும் புஸ்தகத்தில் இதன் கருத்தைப் பின்வருமாறு வெளியிட்டிருக்கிறார்:—"ஒன்றானவும் நிறைவானவுமான பரிபூரணத்தில் பகுதியானதும் பிரிவானதுமான ஜீவாத்மா ஒன்றுபடவேண்டுமென்ற மன நெகிழ்ச்சியானது, வார்த்தைக்குக் கோசரமாய் உபாசனை, ஆராதனை என்று வழங்கும்." இகத்துக்கேயன்றி பரத்துக்கும் இந்த உபாசனை அவசியமாக விருக்கிறது. ஏனென்றால் வித்யை (வித்தை) வாச்சாமாத்திரமானதாகவின்றி வாக்குக்கு அதிர்ஷ்டானமானதோர் தேவதை (பிரகாச) ரூபமாக விருக்கிறது. அந்த தேவதையையறிந்து அதன் வழிபடுதலே உபாசனையாம். தேவதை என்பது பிரகாசரூபமானது. அந்தப்பிரகாசம் "ஸ்வயம் பிரகாசம்" என்றும், அந்தஸ்வயம்பிரகாசத்தின் பிரதிபிம்பமான "விமர்சம்" என்றும் இருவகையாம். ஸ்வயம் பிரகாசமாயுள்ளது ஆதியந்தமற்று விளங்கும் நிர்குணபிரம்மமாம். விமர்சமாயுள்ளது அதன் பிரதீகமாய் ஆதிமத்தியாந்தமுமாய் விளங்கும் சகுணபிரம்மமாம். நிர்க்குணப்ரஹ்மம் மனோவாக்காதிகளுக் கெட்டாத முற்றும் நிறைந்த முழுமுதலுக்கும் முதலாய் எல்லாவற்றிற்குள்ளு மிருந்தும் எல்லாவற்றிற்கு மப்பாலாய் தானேதானாய் இரண்டற்றதாய் விளங்குவதாயிருப்பதால் ஒரு பிரதீகத்தைக் கொண்டு செய்யும் உபாசனைக்கு அஃது அநர்கமானது என்று சொல்லுவர் நால்வல்லோர். ஆனால் பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் வாக்கென்ன வென்றால், சகுணோபாஸனை, நிர்க்குணோபாஸனை யென்கிற இரண்டும் முக்திக்கு ஸாதனமானவழிகளே. ஆனல் சகுணோபாஸனை நிர்க்குணோபாஸனையைவிட இலகுவானது. நிர்க்குணோபாஸனையோ மிகவும் பிரயாஸையானது: ஏனெனில் நிர்க்குணவிஷயமான நிஷ்டையானது தேகாபிமான முடையவர்களால் அடையப்படுவது கஷ்டம். அர்ச்சுனன் இது விஷயமாகக்கேட்ட கேள்விக்கு பகவான் கீதையின்

12-வது அத்தியாயத்தின் முதலில் தன் அபிப்பிராயத்தை நன்றாக வெடுத்துச்சொல்கிறார். அவருடைய திருவாக்கு என்னவெனில்:—

“என்னிடத்தில் மனதை நிறுத்திச் சகல கருமங்களையும் என்னிமித்தம்செய்து, பலனை எனக்கு அர்ப்பணம் செய்தும், அதிக சிரத்தையுடன் கூடியும், எவர்கள் என்னை உபாஸிக்கிறார்களோ, அவர்கள் சிரேஷ்டர்களென்று என்னுடைய நிச்சயமான கொள்கை.

“வாக்குக் கெட்டாததாயும், கண்களால் காணக்கூடாததாயும், மனதிற்கு அகப்படாததாயும், பிரபஞ்சத்திற்குக் காரணமாயும், விருத்திக்ஷயமற்றதாயும், சாசுவதமாயும், சகலத்திலும் வியாபித்திருக்கிறதாயுமிருக்கின்ற நிர்க்குணமான பிரஹ்மத்தை எவர்கள் உபாஸிக்கின்றார்களோ, அவர்களும் இந்திரியங்களை யடக்கிச் சகலத்திலும் ஸம புத்தியுள்ளவர்களாயும், சகல பிராணிகளுக்கும் நன்மையே கோருகிறவர்களாயு மிருந்து என்னையே அடைகின்றார்கள். ஆனால் நிர்க்குணப்ரஹ்மத்தின் உபாசனை மிகவும் பிரயாசையானது. ஏனெனில் நிர்க்குண விஷயமான நிஷ்டையானது, தேகாபிமான முடையவர்களால் அடையப்படுவது கஷ்டம்.

“எவர்கள் சகல கருமங்களையும் என்னிடத்தில் சமர்ப்பித்து என்னைச் சரணமடைந்தவர்களாய் ஒரே விதமான பக்தியினாலே என்னையே தியானம் செய்துகொண்டு, உபாஸிக்கிறார்களோ, என்னிடத்தில் வைக்கப்பட்ட மனசையுடைய அவர்களை ஓ! அர்ஜுனா! மிருத்தியுவாகிற ஸம்ஸார ஸாகரத்திலிருந்து நான் சீக்கிரமாகக் கரையேற்றுகிறேன்.”

இது முடிவான உத்தரம்: இருவகை உபாஸகர்களும் முக்தியடைவார்கள். ஆனால் ஈசுவரனை ஒரு மூர்த்தியாக வழிபடுதல் அமூர்த்தியாக வழிபடுதலைவிட இலகுவானது. இவ்விதமாக உபாசிப்பவர்கள் ஸம்ஸாரஸாகரத்தினின்று இலகுவாய்த் தப்பிக்கலாம். சகுணப்ரஹ்மோபாஸனையிலும் அனேகபடிகளுண்டு. தத்துவஞானப் பிரக்ஞர்கள் சகுணப்ரஹ்மத்தை தன் ரூபமான சத், சித், ஆனந்த மூர்த்தியாகவும், எங்கும் நிறைந்த மூர்த்தியாயும் பூரணமாகவும், ஏகமாகவும், பரமபுருஷனாகவும் தியானம் செய்து விச்ராந்தியையும் சாந்தியையும் அடைவார்கள். இந்தத்தியானம் உபாசனையின் உயர்ந்தபடியாம். இது தத்துவ ஆராய்ச்சியுள்ளவர்களுக்கு அதிக அனுகுணமாகவிருக்கும். ஏகிபாவமும் உண்டாகும். தியானயோகத்துக்கு மிகவும் ஸாதகமானது இதில் தியானம் முற்றி தியேயாகாரப்பட்டால், தியேயாகார அனுபவமுதிர்ச்சியில் சங்கல்பவிகற்பமிரண்டும் நழுவிப்போக, நிர்விகற்பஸமாதி ஸம்பத்தும், அதன்திட அப்பியாசத்தால், நிர்க்குணப்ரஹ்மஸ்வானுபவமும் சித்திக்கும். நிர்விகற்பஸமாதியின் முடிவே நிர்க்குணப்ரஹ்மானுபவமாம். அது ஸகஜமானால் அதுவே “ஆரூடஸமாதி” யென்று சொல்லப்படும் நித்த முத்த சுத்தப்ரஹ்மானுபூதிச்செல்வமாம் விதேஹ கைவல்யம். விதேஹகைவல்யமென்றால் தேஹம் விழுந்துபோவதல்ல: தேஹபாவனை யறவே நழுவிப்போதலாம். இங்கே தேகமென்று சொன்னது ஸ்தூல சூக்ஷ்மகாரண தேக மூன்றுக்கும் சொன்னதாம். இதைப்பற்றி “அகங்காரத்தை விட்டொழித்தால் அறிவீர் நீர் அதிசயத்தை” யென்ற தலைப்பின் கீழ் வரைந்திருப்பதை உள்ளுணர்வோடு வாசிக்க வல்லார்க்கு பகவான் ‘குப்தவித்தை” யென்று சொல்லியபடி அதிரகஸ்யமாயுள்ள அனேக தத்வ விசேஷங்கள் விளங்கும்.

சச்சிதானந்த மூர்த்தத்தைவிட ஸ்தூலமானதாய் அதிக வரம்புக் குட்பட்ட பிரதீக

மாகவிருந்தால் அந்தச் சாந்தமும் சமாதானமும் அவ்வியல்பினர்களுக்கு உண்டாகாது. மூர்த்தியுபாஸனைகள் எல்லாவற்றிலும் அமூர்த்தமான ஸ்ரீசக்ரோபாஸனை மேலானது. அதைப்பற்றி இங்கு நாம் ஏதும் சொல்ல சாத்தியமில்லை. பிம்போபாஸனை அதிலும் எளிதாம். தியான யோகசித்தியும் தத்துவதரிசனமும் லபிக்காதவர்கள் வழிபட ஒரு மூர்த்தம் அவசியமாகவிருக்கிறது. அஃது உபாசகனுக்கு எப்பொழுதும் பரமபுருஷனாகவே தோன்றும். ஆனால் தத்துவ ஆராய்ச்சி முதிர்ந்தால்தான் உபாஸனா மூர்த்தமாகக் கொண்டு தான் வழிபடும் வஸ்துவில் பரவஸ்துவின் ஒரு பகுதி ஆவிர்ப்பவத்திருக்கிறதென்று தன்னறிவுக்கு விளங்கும். உபாஸனையின் அதிக சுலபமான வழியாம் "பூஜை" யென்று சாதாரணமாய் வழங்கும் உபாசனையில், தான் பூஜை செய்யும் பிம்பம் எதுவானாலும் அதுவே உபாஸகனுக்கு, அந்த மூர்த்தியினிடத்தில் நெகிழும் அன்பின் மிகுதியினால், பரமபுருஷனாகத்தோன்றும். இப்படித் தோன்றுவது மனோபாவமேயாதலால் அந்தமட்டில் அது வாஸ்தவம்தான். பரவஸ்து பாவாதீதமானதால், பாவனைக்குள்பட்டது எப்போதும் அப்பரவஸ்துவின் ஒரு பகுதியேயாகி நிற்கும். "ஒரு பகுதி" யென்று ஏற்படும்பொழுது அப்பகுதியில் மிகுதிபேதம் ஏற்படக்கூடியதுதானே. அதைப்பற்றி விசாரிக்கில் வளரும்.

இந்த அதிசாதாரணமான கீழ்ப்படியுபாஸனையில், உபாஸகன் உபாஸனைக் கருகமாக ஒரு திவ்விய விக்ரஹத்தை வைத்துக்கொண்டு அந்தப் பிரதீகத்தைப் பூஜிக்கிறான். ஹிருதயத்தி லெழும் அன்பு பக்தியின் காரணமாக ஹிருதயகமலம் மலருவதற்கு அழகான சின்னங்களாக புஷ்பங்கள் பூஜையில் உபயோகிக்கப்படுகின்றன. மந்திரத்தினால் ஜலத்தை சுத்தி செய்து விக்ரஹத்தின் மேல் அபிஷேகம் செய்து பின்பு தன்மேல் புரோக்ஷணை செய்து கொள்கிறான். உபாசிய மூர்த்தியின் நாமம் வருகின்ற மந்திரத்தை மௌனமாய்ச் சிலமுறை ஆவர்த்தனை செய்கிறதின் மூலமாய், தன்னுடைய சூக்ஷ்ம, காரண தேஹங்களில் அந்த மூர்த்தியின் ஆவேசம் உண்டாகும்படி செய்துகொள்கிறான். பின்னர் உபாசகன் தன் ஸ்வபாவத்துக்குத்தக்கபடி மெய்மறந்து அந்த மூர்த்தியை ஸ்தோத்திரம் செய்கிறான். ஸ்தோத்திரத்தினால் மனம் உற்சாகமடைய, அந்த மனோற்சாகத்துடனே தியான நிலையில் புகுகிறான். எதிரிலிருக்கும் பிரதீகத்தை மறந்து அதில் ஆவிர்ப்பவித்திருக்கும் அந்த ஒன்றையே நாடினவனாய் அதிலேயே அவன் மனம் லயிக்கிறது. அந்த மூர்த்தியின் சாந்நித்தியத்தையடைந்தவனாய்ச் சாந்தியும் சமாதானமும் பெற்று ஆனந்தபரவசனாகிறான். இந்த உபாஸனை மனச்சலனத்தைக்கெடுத்து மனச்சமாதானம் உண்டுபண்ணி, மனோபாவங்களைச் சுத்திசெய்வித்து, ஆத்மதரிசனத்திற் குரிய மனோ நிலையும் சீலமும் சம்பவிக்கும்படிச் செய்வதற்கேற்ற சாதனமாக விருக்கிறது.

இது பஹிர்முகபாவனை மாறாதவர்களுக்கு மிகவும் உபயோகமானதாயிருக்கிறது. ஏனெனில், இந்த விக்ரஹாராதனையினால் உபாஸனாமூர்த்தி உபாஸகனுடைய மனத்தை ஒருமுகப்படுத்தி அது நிலைபெறும் வண்ணம் செய்விக்கிறது. உபாஸகனது மன நிலையறிந்து அவனது பக்குவத்துக்கு சரியான படி பொருந்தத் தக்கதாய் உபாஸனா மூர்த்தம் தெரிந்தெடுக்கப் பட்டிருந்தால், இந்த விக்ரஹாராதனை மனோபாவங்களை யுற்சாகப்படுத்தி உபாஸனா விக்ரஹத்தில் பிரதீகமாக விருக்கும் மூர்த்தியின் குணவிசேஷங்கள் மனத்தைக் கவர்ந்துகொள்ள ஹேதுவாயிருக்கிறது.

பூஜையானது பஹிர் முகத்தினின்று அந்தர் முகமாய்த் திரும்பினால் உபாஸியமூர்த்தி

மனோபாவமாய் ஆவிர்ப்பவித்து உபாஸகனை சூக்ஷ்மபரக்ஞா பூமிக்கு நடத்துகிறது. மூர்த்தியம் உயிர்ப்பித்துக்கொண்டு அவனுக்குச் சாக்ஷாத்தாக தரிசனம் கொடுக்கிறது. சரியானபடி நிர்மாணித்து (நியமாகமம் தப்பாமல்) மந்திரத்தால் பிராணப் பிரதிஷ்டை செய்வித்திருக்கிற விக்ரகம், தினந்தோறும் உபாஸகனின் பக்தி விசேஷத்தால் அனுகூலமான காந்தச் சலனம்போன்ற ஆகர்ஷண சக்தி அமையப் பெற்றுப் பின்னர் சலனம் அதினின்றும் உபாஸகனின் சூக்ஷ்ம கோசங்களைச்சிராக்கி ஒழுங்கு படுத்துகிறது. அதனால் அவன் சாந்தமும் சமாதானமுமான மனோபாவமுள்ளவனாகி அவன் பிரார்த்தனையும் தியானமும் வீரிய வித்தாக ஆகின்றன. அதாவது, உடனே பலனைக் கொடுக்கும் சக்திவாய்ந்தன வாகின்றன. பக்தன் இந்தப்பிரதீகத்தை நினைக்குந்தோறும் சந்தோஷமடைகிறான். தன் பிராண சினேகிதன் படத்தைப் பார்க்கும்போதுண்டாகும் சந்தோஷத்தைப்போல் இன்னும் அதிகமாக ஆனந்தானுபவத்தை யடைகிறான்.

மேற்சொன்ன ஈசுவரோபாஸனையன்றி தேவதா உபாஸனையும் உண்டு. குலதேவதா பூஜை யென்பது கிரகங்கள்தோறும் அனேகமாய் நடந்துவருகிறதுண்டு. அந்தக்குல தேவதா மூர்த்தங்கள் குருவால் தெரிந்தெடுத்துச் சொல்லப்பட்டதாக விருக்கலாம்; அல்லது மனத்துக்கு ரமணியமாயிருக்கிற தென்று தானே தெரிந்தெடுத்திருக்கலாம். இந்த மூர்த்தியைத் தான் "இஷ்ட தேவதை" யென்று சொல்கிறது. இதன் பூஜைக்கு இஷ்ட தேவதா உபாசனை யென்று பேர். இந்த இஷ்டதேவதா உபாஸனையின் விித்தியினால், உபாஸகன் தனக்கு வேண்டிய இகபரஸாதகங்களை யெல்லாம் கேட்டுக் கொள்ளவும், உற்றவிடத்துதவியாய் நின்று தனக்கு எல்லா சமயங்களிலும் உதவவும் இசைந்ததோர் தேவதா மூர்த்தம் அவனை இடைவிடாது காத்து ரக்ஷிக்கக் கடமைப்பட்டதாக அமைகிறது. இதன் விசேஷத்தை வசிஷ்ட பகவான் லீலகதையினால் ஸ்ரீராமனுக்கு நன்றாக விளங்கப்புகட்டி யிருக்கிறார். ஆசையறுக்கச் சக்தியற்றோர் ஆசைவழிப் பட்டு முறைக்கிரமமாக ஆசையைவளர்த்து ஆசாபாசத்தின் உண்மையை யறிந்து ஆசை கடந்ததோர் ஆத்மலாபத்தையடைய இஃது பிரவிருத்தி மார்க்கத்தில் பிரதானமாய் அமர்ந்ததோர் அனுகூல சாதனமாம். இந்த இஷ்டதேவதா உபாஸனையானது கிரமக்கிரமேண உபாஸகனை "இச்சா சக்தி உமாகுமாரி" என்னும் சிவசூத்திரத்தின் உண்மையை உணரச் செய்யும். அந்த உணர்வு சித்திக்கும் காலையில் பிரவிருத்திமார்க்கம், நிவிருத்திமார்க்கம் என்று பகுத்துச் சொன்னதெல்லாம் கடைசியில் பரையோக மூலமாய்ப் பரை சாந்தியில் கொண்டுபோய் விடுகிறது என்று உபாஸகன் தனக்குள்தானே யறிந்து கொள்கிறான். இதுவே எல்லா உபாஸனைகளின் முடிவுமாம். இந்த முடிவெய்தியவன் நிர்க்குணோபாஸனையில் தானாகவே பிரவேசிக்கிறான்.



SANKARAPRIYAN.

## சங்கரப்பிரியன்.

## XII. வழிக்கு வருதல்.

சென்ற இரண்டு அத்தியாயங்களில் சொன்னவைகள் நடந்து சில வருஷங்களாயின. ஒருநாள் அரசனது மூத்தகுமாரன் சங்கரப்பிரியன் தனது பங்களாவில் ஒரு சோபாவில் உட்கார்ந்து பின்வருமாறு தனக்குத்தானே பேசிக்கொள்கிறான்.

சங்கரப்பிரியன்:—"என்ன மடத்தனமான காரியம் செய்துவிட்டேன். தெரியாமல் அல்லவோ ராஜ்யம்வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். என்னை ஒருவரும் லக்ஷியம் செய்வதில்லை. முண்டை தனபாக்கியம் நேற்று என்னசொல்சொன்னாள்! நான் பல் பிடுங்கின பாம்பென்றல்லவா சொன்னாள்! இருக்கட்டும்! அவள் முகத்தில் விழிப்பதில்லை. நேற்றையதினம் நானும் எனது தம்பியும் உட்கார்ந்திருக்க எல்லோரும் மஹாராஜா மஹாராஜா என்று அவனுக்கு மரியாதைசெய்ய, என்னை லக்ஷியம் பண்ணினாரில்லை. இதல்லவோ என்னை முற்றிலும் பாதிக்கிறது. இன்றையதினம் தனபாக்கியம் வீட்டுக்குப் போகாததால் பொழுதே போகவில்லையே! எவ்வளவு நாள் இப்படி காலம் கழிக்கமுடியும்! இப்படி ஜீவித்திருத்தல் ஒருநாள் கூட முடியாது. தற்கொலை செய்துகொண்டிறப்பதே நலம். இப்பொழுது ராத்திரி 9 மணி ஆயிற்றே, தூக்கத்தைக்காணோமே, தனபாக்கியமிருந்தால் சதுரங்கமாவது ஒரு ஆட்டம் ஆடலாம். ஆனால் அவள் முகத்தில் இனிவிழிக்க இஷ்டமில்லை. என்னசெய்வேன்! வெளியேயாவது போகிறேன். உயிர் துறக்க சுளுவான வழி எது? இப்பொழுது காளிகோவிலில் ஒருவரும் இருக்கமாட்டார்கள். அவ்விடம் போனால், ஏகாந்தமாய் இருந்து இறக்க ஒருவழி தேடலாம்." (என்று சொல்லிக் கோவிலுக்குவந்து உள்ளேபோய்) "இக்கதவைச்சாத்தி தாளிட்டுவிடுகிறேன். திறந்திருந்தால் ரோந்துக்காரர்கள் யாராகிலும் உள்ளேவந்து என்னைக்கண்டால் நன்றாயிராது"—என்று சொல்லிக்கதவைத் தாளிட்டுவிட்டு அவ்விடமிருந்த திண்ணையில் படுத்துக்கொள்கிறான். படுத்த கொஞ்சநேரத்திற்கெல்லாம் யாரோ கதவைத் தட்டுகிறார்: சங்கரப்பிரியன்:—"யார் அது கதவைத்தட்டுகிறது?"

மஹாகாளி:—கதவைத்திற சீக்கிரம்! தாமதிப்பாயே யாகில் உனது குடலைப்பிடுங்கி மாலையாய்ப் போட்டுக்கொள்வேன்.

சங்கரப்பிரியன்:—மாலைக்குப் பூ அகப்படவில்லையோ? அந்தப்பருப்பு இங்குவேகாது. பனங்காட்டு நரியா சலசலப்புக்கஞ்சும்! இந்த மெரட்டலுக்கெல்லாம் நான் பயந்தவனல்லன். ஊர் பேர் சொன்னாலொழிய கதவு திறக்கப்படமாட்டாது.

மஹாகாளி:—அடே என்ன தைரியம்! நான் ஆர் தெரியுமா? விகடம்பண்ணாதே! கதவைத்திற! நான் படுக்கப்போகவேண்டும்.

சங்கரப்பிரியன்:—நீ இன்னாரென்று சொன்னாலன்றி கதவைத்திறவேன்.

மஹாகாளி:—நான்தான் இந்த ஊர் மஹாகாளி! இப்பொழுது கதவைத்திற!

சங்கரப்பிரியன்:—நீ காளியென்பது மெய்யானால் என் ஸங்கடங்களை நிவர்த்திசெய்கிறேனென்று வாக்தானம் செய்.

மஹாகாளி,—நீ யார்? உனக்கென்ன கஷ்டம்? வாய்விட்டுச் சொல்.

சங்கர:—நான் அரசகுமாரன். எனக்கு ராஜ்யமில்லை தாஸியால் துன்பமடைந்தேன், நற்பதவியை போக்கடித்துக்கொண்டவன்; அதிகம் சொல்வானேன், உனக்கே தெரியும். வரம் தருவதாயிருந்தால் கதவைத் திறப்பேன்.

மஹாகாளி மனமிரங்கினாள். "புத்திரா, நீ கேட்கும்வரம் தருகிறேன், கதவைத்திற" வென்றாள்.

தேவதையின் அனுக்கிரகம் கிடைத்த உடன் சங்கரப்பிரியன் கதவைத்திறந்தான். காளி உள்ளே நுழைந்ததும் அவள் காலில் விழுந்து கண்ணீர்விட்டழுதான். மஹாகாளி அவனையாதரித்து பூர்வ விருத்தாந்தங்களை

ஸவிஸ்தாரமாய்க் கேட்டறிந்து நினைத்தவிடத்துக்குப்போகக் கூடியபாதுகை யொருஜோடியும், வேண்டியபதை யெல்லாம் கொடுக்கும் மடிஸஞ்சியொன்றும் கொடுத்தாள். அவைகளால் சங்கரப்பிரியனுக்கு உண்டாகும் நன்மைகளையுமெடுத்தோதினள். சங்கரப்பிரியன் அவைகளின் ரகஸ்யங்களை யறிந்து காளியை நமஸ்கரித்தான். ஆசிர்வாதம்செய்தாள். இராஜகுமாரன் அவளிடம் விடைபெற்றுக்கொண்டு தன்மனோரதம் நிறைவேறத் தபஸ்செய்வான் காசிக்குச்சென்றான்.

---

## XIII. கரும்புவில்லோன் வெற்றி.

மன்மதன்:—தனக்குள், ஓஹோ! சங்கரப்பிரியா, பரத்தையா இச்சிக்கிறாய் எனது பஞ்சபாணங்களின் மஹிமையை அறியவில்லை போலும் ஆனையானைப்பட்ட இருடிசிரேஷ்டரான விசுவாமித்திரரை விட நீ அதிகமோ. திரிநேத்திரதாரியான பரமசிவனும் கூட எனது அரவிந்தம், அசோகம், சூதம், நவமாலிகை, நீலோத்பலம் முதலான புஷ்பபாணங்களின் மஹிமையை அறிந்திருக்க அற்பனாகிய நீ எவ்வளவு என்று சொல்லி தனது கருப்புவில்லை வளைத்து நாணேற்றி, பஞ்சபாணங்களையும் ஏககாலத்தில் சங்கரப்பிரியன்மேல் பிரயோகிக்க, அவனும் மோகத்திலாழ்ந்து, இகத்தை வெறுக்கவேண்டுமென்ற வைராக்கியத்தை முற்றிலும் மறந்து துறந்து அனங்கனுடைய வலையிற் சிக்கினவனைக் காளிகொடுத்த பாதுகையின் மகிமையால் ஆகாயமார்க்கமாய் வந்துகொண்டிருக்கிறான். இப்படி யிருக்க மத்திய மாகாணத்தின் அரசனாகிய நாகராசனது சிமந்த புத்திரியாகிய, மனோரஞ்சினி என்பவள் விடியற்காலத்தில் பரிமளதைலாப்பியங்கனஞ் செய்து காலைச் சிற்றுண்டி உண்டபிறகு நான்காவது உப்பரிகையில், தோழி பரிமளாங்கி என்பவள், அவளது நீண்ட கூந்தலை சிக்கெடுத்து ஆற்றிக்கொண்டிருக்க ஒரு சோபாவில் வீற்றிருந்தனள். முன்னரே அனங்கனது புஷ்பபாணங்களால் அடிபட்டு மோகவலையிற் சிக்கித் தத்தளிக்கும் எம் சங்கரப்பிரியனும் அவளது முகத்தைப் பார்த்து பின்வருமாறு சிந்திக்கலானான். என்ன ஆச்சரியம்! நான் பார்ப்பது சசாங்கனோ? இல்லை. திவாகரன் ஆட்சியில் நிசாகரனுக்கு அதிகாரமேது; தவிர சந்திரனுக்கு களங்கமுண்டு இந்த பிம்பமோ மாசற்றதா யிருக்கிறது. ஒருக்கால் சரசிருஹமாயிருக்குமோ? இருக்கலாமென்று தோன்றுகின்றது. ஏனெனில் நான் இரண்டு வண்டுகள் அதில் உட்கார்ந்திருக்கக் காண்கிறேன். இல்லை அது பத்மமா யிருக்குமென்று எண்ணத்தகாததா யிருக்கிறது. ஏனெனில் குசுமம் தடாகங்களில் அல்லவோ காணப்படும் நகரமத்தியில் ஒரு உப்பரிகையின்மேல் தடாகமேது. தவிர வண்டுகள் மீன்வடிவமா யிருப்பதில்லை. ஆ! இப்பொழுது நன்கு காண்கிறேன். இம்மாது தேவகன்னிகையோ, ரம்பையோ, ஊர்வசியோ, திலோத்தமையோ, நாககன்னிகையோ அறிகிலேன். எப்படியாவது இவளை மணம்புரிய முயலவேண்டும். சைத்தானோடுகூட வேண்டியிருந்தாலும் அவளை அடைய சொர்க்கத்தை இழந்துபோவேன் என்ற உடன்படிக்கை செய்துகொள்வேன். இத்தருணத்தில் நான் எங்கேயோ படித்திருக்கும் இரண்டு கதைகள் ஞாபகத்திற்கு வருகின்றன. ஒருவன் வருஷத்தில் ஒரு மாதம் ஒநாய் ரூபமாக இருந்து சைத்தான் வசமாய் கூடுமானவரைக்கும் ஜீவவதை செய்வதாயும் பாக்கி 11-மாதங்களில் சைத்தானின் உதவியால் இவ்வுலகில் மனிதனால் அனுபவிக்கக்கூடிய அதிகாரம், பொருள், இன்பம் முதலிய யாவையும் அனுபவிக்கிறதென்பதும் இருபது வருஷங்களுக்குப் பிறகு முற்றிலும் சைத்தான் தேசமாகிய நரகத்தில் வாழ்வதென்பதுமான ஒரு உடன்படிக்கைசெய்து முடிவில் நரகவாசியானனென்பது ஒன்று.

மற்றொன்று ஒரு பிச்சைக்காரன் மனித ரூபமாய் சஞ்சரித்துக் கொண்டிருந்த சைத்தானை ஒரு நாள் சந்தித்து பிச்சை கேட்க சைத்தானும் தனது சட்டைப் பையினின்றும் ஒரு அரத்தையெடுத்து அவன் கையில்கொடுத்து இதனால் உனது உதட்டில் ஒருதரம் ராவிக்கொள் என்று சொல்ல அப்பிச்சைக்காரனும் அப்படிச்செய்த மாத்திரத்தில் புதிய தங்கநாணயமொன்று பொத்தென்று கீழே விழக்கண்டான். பணமென்றால் பிணமும் வாயைத்திறக்கு மல்லவா? ஏழைப் பிச்சைக்காரனும் ஆவலுடன் அப்பணத்தையெடுத்துக்கொள்ளப்போக, சைத்தானும் பொறு பொறு! நீ ஆத்திச்சூடி படித்திருக்கிறாயா? அதில் அவசரப்படேல் என்று சொல்லியிருக்கிறதே நீ இந்தத் தங்க நாணயத்தையும் எடுத்துக்கொள்ளலாம்; தவிர நினைத்தபொழுது தங்க நாணயங்களை அடைய ஹேதுவான இந்த அறத்தையும் உனக்கே தருவேன். இவ்வரத்தில் இன்னொரு மகிமையுமுண்டு. உனக்கு யாராவது சத்ருக்களிருந்தால் இவன் "உதட்டை ராவு" என்றுசொல்லி அறத்தை விட்டுவிட்டால் நீ திரும்ப என்கைக்குவா என்று சொல்லும்வரையில் அவன் உதட்டை அறுத்துப் புண்படுத்தும் என்றுசொல்ல, அப்பிச்சைக்காரனும் "அப்பா, நீ மஹாராஜனாயிருப்பாய் எனக்கு தரித்திரம் நீங்குவதும் தவிர மேல் வீதியில் ஒரு செட்டியிருக்கிறான் அவனொரு பணக்காரலோபி. அவன் ஒரு நாளாகிலும் பிச்சையளித்தான் என்பதில்லை. அவனை தண்டிக்கவேண்டுமென்ற விருப்பம் வெகு நாளாய் எனக்குண்டு. நீ இந்த அரத்தை எனக்குத் தந்தருள்வாயானால் எனது காரியம் முற்றிலும் கைகூடுமென்றான். இதைக்கேட்டு சைத்தானும் இவ்வுலகத்தில் ஒருவன் மற்றொருவனுக்கு பிரதிப்பலனைக்கருதாது உபகாரம் செய்வதில்லை ஆகையால் நீ இவ்வரத்துக்குப் பதிலாக எனக்கென்ன தருவாய் என்றுகேட்க, அப்பிச்சைக்காரனும் "அப்பா நானோ பரம ஏழை உனக்குகொடுக்க என்னிடத்தில் என்ன இருக்கிறது. என் தரித்திரத்தைத் தவிர என்னிடத்தில் வேறொன்றுமில்லை. வேண்டுமானால் நீ அதை யெடுத்துக்கொள். நீ அரத்தை எனக்குக் கொடுப்பதால் இது வரையில் என்தோழனாயிருந்த தரித்திரமோ அநியாயமாய் நசித்துப்போம். ஆகையால் அப்படிப்போகாமல் அதை உனக்குக் கொடுப்பது எனக்கு மிகவும் திருப்திகரமானதே." என, சைத்தானும் இவ்வசனத்தைக் கேட்டு நகைத்து "அப்படியா! என் ஒளிக்கிறாய்! தரித்திரத்தைத் தவிர உன்னிடம் ஒன்றுமில்லையா? அப்படியானால் உன் தோழனாகிய தரித்திரம் எப்பொழுதும் உன்னோடுகூடவே இருக்கட்டும். நான் போகிறேன்" என, அப்பிச்சைக்காரன் அப்பா கோபித்துக்கொள்ளாதே நான் தமாஷுக்குச் சொன்னேன். இவ்வரத்துக்கு பதிலாக நீ என்னிடமிருந்து என்ன பிரதிப்பலனை விரும்புகிறாய்? என்னால் கூடியது எதுவானாலும் செய்யவாவது கொடுக்கவாவது தயாராயிருக்கிறேன்" என்றுசொன்னான். சைத்தானும் அப்படியானால் நாளை காலமே நான் உனது குடிசைக்குவருகிறேன் அப்பொழுது நேரில் பேசிக்கொள்ளலாம் என்று சொல்லிப்போய்விட்டான். பிச்சைக்காரனும்தனது குடிசைசேர்ந்ததும் இராமுழுவதும் தான் அடையப்போகும் திரவியத்தை செலவழிப்பதெப்படியென்றும் தனது சத்ருக்கள் யார்யாரை சிட்சிக்க வேண்டுமென்றும் யோசித்துக்கொண்டிருந்தானே ஒழிய கண்ணமர்ந்தானில்லை. பொழுதுவிடிந்ததும் தனதருகில் நேற்றுத் தான்கண்ட மனிதன் நின்று கொண்டிருக்கக் கண்டு திகைத்தான். ஏனெனில் ராத்திரிபடுக்கப்போகும்பொழுது கதவை நன்றாகத் தாளிட்டிருக்க அவன் எப்படி உள்ளேவந்தான் என்பது அவனுக்கு ஆச்சரியத்தை யுண்டாக்கிற்று. அம்மனிதனைக் கதவு தாளிட்டிருக்க நீ எப்படி உள்ளேவந்தாய் என்று கேட்க, அவனும்பைத்தி

யக்காரா நீ நேற்றிரவு திரவியத்தையும் சத்துருக்களை தண்டிப்பதைப்பற்றியும், நினைத்துக்கொண்டு புத்திமாருட்டத்தால் கதவை நன்ருகத்தாளிடவில்லையென, அதற்கு பிச்சைக்காரன் ஒருக்காலுமில்லை நான் நன்ருக கதவைத்தாளிட்டது எனக்குத் தெளிவாக ஞாபகமிருக்கிறது. நீ ஒரு அசாத்தியமான மனுஷன். கைகாரப்பேர்வழி! இருக்கட்டும். அரம் எங்கே? என்னல் ஆகவேண்டியதென்னவென்றுகேட்க, அம்மனிதனும் அப்படி கஷ்டமான தொன்றுமில்லை. ஒரு சிறிய உடன்படிக்கைக்கு நீ உடன்பட்டு கையெழுத்துப்போடவேண்டியதுதான் என, அதற்கு பிச்சைக்காரன் என்ன உடன்படிக்கையென்றுவினவ, அம்மனிதன் தான் தயார்செய்து கொண்டுவந்திருந்த ஓர் பத்திரத்தை அவன் கையில்கொடுத்தான். அவனும் அதைப்படித்துப்பார்த்து பிரமித்து அம்மனிதன் முகத்தை நோக்கினன். அம்மனிதனும் என்ன இவ்வுடன்படிக்கைக்கு கையெழுத்துச் செய்ய உனக்கிஷ்டமிருந்தால் இதோ அரம் உன்னுடையது: நீ மகாப்பிரபுவாக ஆகலாம் "இந்திரனும் எதிரில்லை, சந்திரனும் நிகரில்லை என" வாழலாம். தவிர இதுவரையில் உனக்குப் பிச்சையிடமாட்டேனென்றவர்களையும் உன் மனம் ஆறுதலடையும்படி சிக்ஷிக்கலாம். இல்லாவிட்டால் நான்போகிறேன். நீ உனது தரித்திரத்தையும் சத்துருக்களது நிந்தனைகளையும் அனுபவித்துக்கொண்டிரு, என்றுசொல்லிப் போகஎத்தனிக்க, பிச்சைக்காரனும் அவனது கைகளைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு "அப்பா வாய்ச்சொல்போதாதா தஸ்தாவேஜ் என்னத்திற்கென்று" கேட்க, அவனும் "அப்படியல்ல இந்தக்கெட்ட உலகத்தில் வெள்ளையும் கருப்புமான உடன்படிக்கைக்குச் சமானமானது ஒன்றுமில்லை" என, அப்பிச்சைக்காரனும் பேனு இல்லையேயென தன் ஜோப்பினின்றும் ஒன்றை எடுத்துக்கொடுக்க, இங்கிவேண்டுமே என்றுகேட்க அரத்தால் உதட்டை ஒரு தரம் ராவச்சொல்லி அவ்வுதட்டினின்று வடியும் ரத்தத்தில் பேனவை தோய்த்து உடன்படிக்கைக்கு கையெழுத்து வாங்கிக்கொண்டு அரத்தையும் உதட்டின் காயம் ஆறவேண்டியதற்கு ஒரு சிமிழ்மையையும் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். பிச்சைக்காரனும் அரத்தினது மகிமையால், யதேஷ்டமான திரவியத்தையடைந்து சத்துருக்களையெல்லாம் சிக்ஷித்து பெரியமாளிகை ஒன்று கட்டிக்கொண்டு எப்பொழுதும் ஒரு சோபாவின்பேரில் படுத்துத் தூங்குவதும் எழுந்து உட்கார்ந்து அருகிலுள்ள மேஜையின்மேல் வைக்கப்பட்டிருக்கும் ஆகாராதிகளை யதேஷ்டமாய் தின்று சாராயங்களை புட்டி புட்டியாய் குடித்து சுருட்டு குடிப்பதனல் உண்டாகும் புகையாகிற மேகங்களால் சூழப்பட்ட ஒரு மாம்ஸபர்வதமாய் 20-வருஷகாலம் விளங்கினன். ஒருநாள் விடியற்காலையில் ஒருமனிதன் மாளிகைக்குள் வர எத்தனிக்கையில் வாசல்காற்கும் சேவகன், "யாரது! உள்ளேபோகிறது போகக்கூடாது" என்று தடுக்க, அம்மனிதன் அவனைக்காலால் ஒரு உதை உதைத்து காலால் நிற்பவனைத் தலையால் நிற்பவனுய்ச்செய்து உள்ளேபோய் வீட்டு எஜமானனிடம் "ஐயரவாள்எழுந்திருக்கலாம் வருஷம் 20-சரியாப்போய்விட்டது. இனிமேல் உமக்கு நீர் எழுதிக்கொடுத்திருக்கும் உடன்படிக்கையின்படி நமது தேசமாகிய நரகத்தில் வாசம்" என்றுசொல்ல, நமது மாம்சபர்வதம் கைகளால் புகையை விலக்கி, வந்திருந்த மனிதனை ஏற இறங்கப்பார்த்து "என்ன? எழுந்திருக்கவா? உன்னேடுகூட வரவா? எனக்கு நரகத்தில் வாசமா? என்ன தைரியம் உனக்கு? அரமே இவன் உதட்டை ராவு என்று சொன்னமாத்திரத்தில் அரமும் ஒரே பாய்ச்சலாய்ப்பாய்ந்து அம்மனிதன் உதட்டை கௌவிக்கொண்டு விடாமல் அறுத்து இரத்தக்களமாகச்செய்ய, அம்மனிதனும் வேதனைபொறுக்க மாட்டாமல் காலி

னால் நிற்கிறுனே தலையினால் நிற்கிறுனே என்பதும் தெரியாமல் மிகவும் ஹீனஸ்வரமாய் மன்னிக்கும்படி கேட்க, மாம்சபர்வதமும் கொஞ்சமேனும் ஈவிரக்கம் பச்சாத்தாபமில்லாமல் என் உடன்படிக்கையை இப்படித்தா என்று கையை நீட்ட அம்மனிதனும் அதைக்கொடுக்க, வாங்கி துண்டுதுண்டாய் கிழித்து அவ்விடம் எரிந்துகொண்டிருந்த அடுப்பிற் போட்டு பொசிக்கிவிட்டு இப்பொழுது நீர் போகலாம்: முன்னமேயே உம்மை மாத்திரம் அரத்திலிருந்து தப்பித்துக்கொள்ளவேண்டிய ஏற்பாட்டைதேடிக்கொண்டிருக்கவேண்டியது. இவ்வரம் நமது உடன்படிக்கைக்கு ஞாபகக் குறிப்பாக எனதிடம் இருக்கட்டுமென, அம்மனிதன் நீ இதைப்பற்றி எனது உதட்டினின்று அரத்தை விடுவிக்கு முன்னமே யோசித்திருக்கவேண்டியது. தஸ்தாவேஜ் போய்விட்டபடியால் நமது உடன்படிக்கையும் ரத்தாய்விட்டது என்று சொல்லி அரத்தோடு தனது நாட்டுக்காற்றுகிய கெந்தகப்புகையாக மறைந்துபோனுன் என்பது.

எல்லாவற்றிற்கும் ஊருக்குப்போய் யோசனை செய்து தீர்மானிக்கவேண்டும் என்று சொல்லி ஊர்வந்து சேர்ந்தான்.

எம். என். கணேசய்யர்.



EXTRACT

## CHILLIES

## மிளகாய்.

இந்து மதக்கோட்பாடுகளின்படி திருமூர்த்திகளின்றி எப்படிப் பிரபஞ்ச காரியங்கள் செவ்வையாக நடந்தேறிவரமாட்டாதோ அப்படியே பிர்ம்மஸ்வரூபமான உப்பின்றியும், விஷ்ணு ஸ்வரூபமா புளியின்றியும், ருத்திர ஸ்வரூபமான மிளகாயின்றியும் நாமுண்ணுமுணவு ருசியுள்ளதாகாது. ருத்திராம்சத்திற்கு எப்படி கரேமும் தீக்ஷண்ணியமுமுளதென நினைக்கப்படுகிறதோ அப்படியே மிளகாய்க்கும் காரமதிகரித்து நிற்கிறது.

இக்காரமே நாம் சாப்பிடுகிற போஜனத்துடன் உட்சென்று, வாயிலும் வயிற்றிலுமூறுகிற ஜீரண நீரை அதிகரிக்கச்செய்து, ஜீரணசக்தியில்லாதவர்களுக்கும் அந்தச் சக்தியை விருத்திசெய்கிறது. அதிகமாக மிளகாயை உபயோகிக்கிறவர்களுக்கு அஜீரணமும், வாயு உபத்திரவமும் நேருவது அரிது. அஜீரணத்திற்கு இடங்கொடுப்பதே வயிற்றுக்கழிச்சல், பேதி, சக்திக்குறைவு, வாந்தி, அக்கினி மந்தம் முதலிய பல வியாதிகளுக்குக் காரணமென்று எண்ணவேண்டியிருக்கிறது. ஆகையால் 'அளவிற்கு மிஞ்சினுல் அமுதமும் விஷமாம்' என்பதை யுன்னிச் சற்று அதிகமாகவே மிளகாய்க்காரத்தை போஜனத்தில் உபயோகிப்பது பலவிதங்களில் நன்மை பயப்பதே. மிளகுக்கும் இவ்வித சக்திகளிருந்தபோதிலும் நாம் இப்பொழுது எடுத்துக்கொண்டதுமிளகாயைப்பற்றி மட்டுமாதலால் அதைப்பற்றி ஒருவாறு இங்கே கூறுவோம்.

நமது தென் ஜில்லாக்களில் சிற்சில விடங்களில் தவிர அநேகமாய் மிளகாய் சாகுபடி செவ்வையாய்க்கவனித்துச் செய்யப்படுகிறதில்லை. ஜப்பான் தேசத்தில் இந்தச் சாகுபடி வெகு சிரத்தையுடன் செய்யப்படுகிறது. செடிகள் 5 அடி உயரமும் அதற்குத்தகுந்த அளவு இடைக்கிளைகளுடன் வளர்ந்து காய்கள் ஆறுமுதல் ஒன்பது அங்குலநீளமும் மூன்றங்குலச்சுற்றளவு முள்ளனவாய், முதலில் பச்சைநிறமும், பிறகுமஞ்சள்நிறமும், கடைசியில் இரத்தவர்ணமுள்ள பழங்களுமாய் மாறிக ரரச்சத்துள்ள விதைகள் நிறைந்து மிளகாய் ஒவ்வொன்றும் ஒருதோலாநிறையுள்ளவைகளாயிருக்கின்றன. இதற்குக் காரண

மென்னவென்றுபார்க்கும்பொழுதுஜப்பானியர்கள் நல்ல ஜாதி விதைகளை மட்டும் சேகரித்துவைத்துக்கொண்டு பயிரிடுவதுடன், பூமியை ஒன்றரையடி யாழம் திருப்பிப்புரட்டி, சத்துள்ள மட்கியஎருக்களையிட்டு, களைகளையடிக்கடி பிடிங்கி யெறிந்து, செடிகளில் உற்பத்தியாகிற பூச்சி புழுக்களையகற்றிக் காப்பாற்றுவதே யென்று எண்ணவேண்டியிருக்கிறது. ஜப்பான் தேசத்தில் தோட்டக்கால்களில் பயிர் செய்யப்படுகிற செடிகள் இரண்டு வருஷம் வரையில் நல்ல பலனைக் கொடுத்துக்கொண்டு வருகிறதாகத் தெரியவருகிறது.

தென்னிந்தியாவில் பயிர் செய்யப்படுகிற சிற்சில மிளகாய்களைப்பற்றி யிப்பொழுது பேசுவோம்.

1. (New Celestial) நீளமிளகாய்.—இது இரண்டங்குல முதல் நான்கங்குலம் வரை நீளமுள்ளது. காய்களில் விதைகள் அதிக சொற்பமாயிருக்கும். அதிக காரமுள்ளதன்று செடிகள் கூடியவரையில் உயர்ந்து செழித்து வளரும். அனேகமாய்ச்செடிகளில் காய்கள் கீழ்நோக்கித் தொங்கும். பழங்கள் நன்றாய்க் காய்ந்தபிறகும் சிவப்பாகவே யிருக்கும்.

2. (Red Clester) குட்டைமிளகாய். இது ஒரு அங்குலத்திற்கு அதிகமாய் நீண்டிராது. நுனி கூர்மையாயிருக்கும். விதைகள் அதிக காரமுள்ளது. செடிகளில் காய்கள் மேல்நோக்கி நிற்கும். கீழ்நோக்கிக் காய்க்கின்ற செடிகளுமுண்டு. இதன் பழங்களும் காய்ந்தபிறகு சிவப்பாகவிருக்கும்.

மேற்கூறிய இரண்டு ஜாதி மிளகாய்களும் கோயமுத்தூர் ஜில்லா பல்லடம், தாராபுரம் தாலுக்காக்களிலும், சேலம் ஜில்லா ஒசூர் தாலுக்காவிலும் ஏராளமாய்ப் பயிரிடப்பட்டபோதிலும், பூமியைப் பக்குவப்படுத்துவதும், எருவிடும் மாதிரியும் சிறந்ததாகக்கூற முடியவில்லை. எரு சேகரிக்கும் விதம் இவ்விடங்களிலுள்ள குடிகளுக்கு இன்னும் நன்றாகத் தெரியவில்லை. இந்த மிளகாய்களே வறட்டுமிளகாய் செய்யப்பட்டுப் பலபக்கங்களுக்கு ஏற்றுமதி செய்யத்தகுந்ததாயிருக்கிறபடியால், இவைகளிலிருந்து நல்ல விதைகளைச் சேகரித்துப் பயிரிட்டால் வெகு லாபங்கிடைக்கும்.

3. (Monstrosum) தோன்லை மிளகாய்.—இது இரண்டு அல்லது மூன்றங்குல நீளமுள்ளதாயும் இரண்டு அல்லது மூன்றங்குலச் சுற்றளவுள்ளதாயுமிருக்கும். இதில்விதைகள் அதிகமாயிராது. காய்கள் நன்றாக முதிர்ந்து பழுத்தாலும் சிவப்பு வர்ணமடைகிறதில்லை. காயாக உபயோகிக்கவும், வற்றலிடவும் தகுந்தது. வறட்டுமிளகாய் செய்வதற்கு அவ்வளவாகத் தகுந்ததன்று. இதில் காரம் மிதமாயிருக்கும்.

4. (Colden dawn) எருதுமுக்குமிளகாய்.—இது ஒரு அங்குலத்திற்கு அதிகமாய் நீண்டிராது. ஆனால் சுற்றளவு மூன்றங்குலம் வரையிலிருக்கும். விதைகள் அதிகமாயிருப்பதால் காரமுமதிகமாயிருக்கும். இந்த மிளகாய் காயாகவிருக்கும்பொழுது பச்சையாகவும், கருப்பாகவும், வெண்மையாகவுமிருக்கும். இந்த ஜாதி மிளகாய்களும் நன்றாய் முதிர்ந்து பழுத்தபோதிலும் சிவப்பு நிறத்தையடைவதில்லை. இதை வேகவைத்துவறட்டு மிளகாய் செய்யப்படுகிறது. ஊறுகாய், வற்றல் முதலியவைகள் செய்வதற்குத் தகுந்தது.

5. (Sweet Mountain) கோட மிளகாய்.—இதுவும் ஒரு அங்குலத்திற்கு அதிகமாய் நீண்டிருப்பதில்லை. நான்கு அங்குலம் வரையில் சுற்றளவுள்ளதாயிருக்கும். மேல் தோல் சிவப்புவர்ணத்தையடைகிறது. இது வறட்டு

மிளகாய் செய்யவும் வற்றல், ஊறுகாய் முதலியவைகள் செய்யவும் தகுந்தது. மித மானகாரமும் அரைத்திதிக்கிப்புமுள்ளதாகை யால், காயாக உபயோகிப்பதற்கு யாவரும் ஆவல்கொள்வார்கள்.

3–4–5-வது ஜாதி மிளகாய்கள் சேலம் ஜில்லா நாமக்கல், ஆற்றூர் தாலூக்காக்களில் செவ்வையாகப் பயிர் செய்யப்பட்டாலும், இதரவிடங்களுக்கு ஏற்றுமதி செய்யத் தகுந்தவளவு பயிர் செய்யப்படுவதில்லை.

6. (Elephant's Trunk) யானைத் துதிக்கை மிளகாய். இது நான்கு முதல் ஆறங்குல நீளமும், மூன்றுமுதல் நான்கங்குல சுற்றளவுமுள்ளது. மிளகாய் யானைத்துதிக்கை போன்ற வளைவுள்ளதாய் விதைகள் நிறைந்து காரமும் அதிகமாயிருக்கும். நிறம் காயில் பச்சையாகவிருந்து, முதிர்ந்துபழுத்தவுடன் சிவப்பு நிறமுள்ளதாகும். இதைவிடச் சிரேஷ்டமான மிளகாயில்லையென்றே கூறலாம். சென்னையில் நடந்த கண்காக்ஷி சபையில் இவ்விதமான ஏழங்குல நீளமுள்ள மிளகாய் காண்பிக்கப்பட்டது. செடியில் இந்த ஜாதி மிளகாய்ப் பழங்கள் தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்க்க வெகு அழகாயிருக்கும். இது வறட்டு மிளகாய் செய்வதற்கும், மற்ற விதமாய் உபயோகிப்பதற்கும் தகுந்தது. செங்கற்பட்டு ஜில்லா காஞ்சிபுரத்தில் இத்தகைய மிளகாயைக் காணலாம்.

7. (Marble) உருண்டை மிளகாய். இது பெயருக்குத் தக்கபடி கோலிகளைப்போல உருண்டையாயிருக்கும். விதைகள் நிறைந்திருக்கிறபடியால் காரத்திற்கு சொல்லவேண்டியதில்லை. செடிகளில் அபரிமிதமாய்க் காய்க்கும். ஒரு செடியில் இரண்டுபடி காய்களுக்கு அதிகமாகப் பரிக்கலாம். காய்கள்முதிர்ந்து பழுத்தால் சிவப்பு நிறத்தை படைகிறது. வறட்டு மிளகாய் செய்யத் தகுந்ததென்பதில் தடையில்லை. இது கோயமுத்தூர் ஜில்லா கருமடை, அன்னூர், கோவில் பாளையம் முதலிய விடங்களில் பயிர் செய்யப்படுகிறது.

8. (Needle) ஊசிமிளகாய். அல்லது ஜீனி மிளகாய், இது பெயருக்குத் தக்கபடி அதிக சிறியதாயும், ஊசியினால் குத்தினாற்போன்ற காரமுடையதாயுமிருக்கும். இந்த ஜாதி மிளகாய்ச் செடிகள் சிற்சிலர் வீட்டுக் கொல்லைகளில் மட்டும் ஒன்றிரண்டு தென்படுகிறதேயன்றி, தோட்டங்களில் அதிகமாகப்பயிர் செய்வதைக்காண்பது அரிது. பயிர்செய்து வர்த்தகப்பொருளாக்கப் பட்டால் நல்ல இலாபகரமானதென்பதில் தடையில்லை. பெரியஜாதி மிளகாய்களில் பத்து உபயோகப்படுத்தும் பதார்த்தத்திற்கு ஜீனி மிளகாய் இரண்டு உபயோகிப்பது போதுமானதாக விருக்கும்.

இப்படியே இன்னும் பலவிதமான மிளகாய்களுமுண்டு. மிளகாய்கள் அனேகமாய் இளக்கமான கருமணற்பாங்கான பூமிகளிலும், ஆற்றுவெள்ளத்தினால் வண்டல் படியப்பட்ட பூமிகளிலும், கிணற்றுத் தண்ணீர் பாய்ச்சி சாகுபடி செய்யப்படுகிற பூமிகளிலும் நன்றாகவிளையும். அனேகமாய் ஏப்பிரல்மாதம் மத்தியிலும் ஜுன் மாதக் கடைசியிலும் நாற்று நடுவது பலனைத் தரத்தக்கது. நன்றாய் மட்கிய ஆட்டெருவும் மண்ணுங்கலந்து, தரையில் அரையடி பாழும் தோண்டியெடுத்து மேற்படி மண்ணைக்கொட்டி, தரைமட்டத்திற்குமேல் அரையடி உயரமிருக்கும்படியாக பாத்திசெய்து நல்லஜாதியானவிதைகளில் நல்லவிதைகளைமட்டும் எடுத்து விதைக்கவேண்டும். நாற்றுகள் நான்கங்குல்வுயரம் வளர்ந்தவுடன் பெயர்த்து, செவ்வையாக எருவிடப்பட்ட பூமியில் இரண்டடிக்கு ஒரு குழிவீதம் செய்து அவைகளில் எருக்கலந்தமண்ணைக் கொட்டிமூடி, நாற்றுகளை நடவேண்டும். இந்த நாற்றுகள் ஓரடிவுயரம் வளர்கிற வரையில் வாரத்திற்கு இரண்டுதடவையும், வளர்ந்த பிறகு வாரத்திற்கு ஒரு

தடவையும் தண்ணீர் பாய்ச்சினுற் போதுமானது. செடிகளில் காய்கள்காணப்படுகிறவரையில் களைச் செடிகளை அடிக்கடி பிடுங்கிப் பூமியைக் கொத்தி, செடிகளின் அடித்தண்டுகளுக்கு மண்ணை அணைக்கவேண்டும். செடிகளிற் காய்கள் முதிர்ந்து பழுக்கத்தொடங்கியவுடன் பழங்களைமட்டும் பரித்துக்கொள்ளவேண்டும். இப்படிப் பரித்துக்கொண்டேவந்தால் செடிகளில் நின்றும் குறைந்தது ஐந்துமாதகாலம் பலனையடையலாம்.

திறமான விதைகளைச் சேகரிக்க எண்ணமுள்ளவர்கள் சில செடிகளை விதைக்கென்பதாகக் குறிப்பிட்டு, அவைகளில் பிஞ்சுகள் வெளிப்பட்டவுடனே, செடி யொன்றுக்கு 10, 12 காய்கள்வீதம் முதிரவிட்டு மற்றவைகளை செடிகளுக்கும் தளிர்களுக்கும் பழுதின்றிக் கொய்துவிடவேண்டும். அப்படிச்செய்வதால் செடிகளில் விடப்பட்ட காய்கள் மட்டும் நன்ருகப் பருத்து முதிர்ந்து பழமாகும். அப்பழங்களைக் காம்பு முறிந்து போகாமற் கொய்து, காற்றுள்ளவிடத்தில் கட்டித் தொங்கவிடவேண்டும். நன்ருகக் காய்ந்தபிறகு எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு, விதைக்கும் தருணத்திலேதான் அப்பழங்களை உடைத்து விதைகளை எடுக்கவேண்டும். அப்படி விதைகளை எடுக்கும்பொழுதும் உட்சத்தில்லாத விதைகளை நீக்கி நல்ல விதைகளைமட்டும் பொறுக்கி எடுத்துக்கொண்டு விதைக்கவேண்டும். பழங்கள் உலர்ந்தவுடனேயே விதைகளை எடுத்து வைப்பது நல்லதன்று.

3–4–5–6-வதாகக் கூறியஜாதிக்காய்களைப் பழமாவதற்கு முந்தியே பரித்து விற்ருல் அதிக இலாபங்கிடைக்கும். 6-வது ஜாதி மிளகாயை வறட்டுமிளகாய் செய்தாலும் விசேஷஇலாபங் கிடைக்குமென்பதில் தடையில்லை.

3–4–5-வதாகக் கூறப்பட்ட மிளகாய்களை நாமக்கல் தாலூக்காவில் 20-டிசமல் பூமியில் செவ்வையாக எருவிட்டுப் பயிர் செய்துபார்த்ததில் பச்சைமிளகாயினுல் 47-ரூபாயும் வறட்டுமிளகாயினுல் 15-ரூபாயும் கிடைத்திருக்கிறது. செலவோ அதிகசொற்பம். இப்பச்சைக்காய்களை விலைகொடுத்து வாங்கும்பொருட்டுச் சிலர் எட்டுமைல் தூரத்தில் இது சாகுபடி செய்யப்பட்டிருந்த தோட்டத்தைத் தேடிக்கொண்டு வந்தார்கள்.

தோட்டச் சாகுபடி செய்கிறவர்கள் இவ்விதமான மிளகாய் விதைகளைச் சேகரித்துப் பயிர்செய்தால் விசேஷமான இலாபமடையலாம். ஸ்ரீ வாணீவிலாஸினி.

டி. ஸி. வேங்கட்ரமணய்யர்.



## விசேஷகுறிப்பு.

### தேவாங்கத்தாரின் மகாசபை.

கோயமுத்தூர் ஜில்லாவில் தேவாங்க வகுப்பாரின் மகாஸபைஆரம்பமாயிற்று. இவர்களில்பெரும்பாலார் நெசவு தொழிலையே ஜீவனுதாரமாய்க் கொண்டிருக்கின்றனர். சிலர் வித்யாப்யாஸம்செய்து உத்யோகங்களில் அமர்ந்திருக்கிருர்கள். இவர்களில் அநேகர் விதேச பாஷையைக் கற்றவர்களல்ல. கோயமுத்தூருக்குள் ஸுமார் 3,000 வீட்டுக்காரர்கள் தேவாங்க ஜாதியராயிருக்கின்றனர். 2,000 மக்கங்களிருக்கின்றன. மேல்நாட்டிலிருந்து வரவழைத்த மக்கங்கள் 200 என்று தெரிகிறது. உயர்ந்த நூல்களால் நல்ல துணிகளை நெய்கின்றனர். மனிதனுடைய உடுப்புக்கு உத்தமமான துணிகளை இவர்கள் நெய்து கொடுப்பார்கள். இவர்கள் தற்போது தங்களுடைய சிரேயோபிவிருத்தியைநாடி ஒருஸபை கூடினுர்கள். ஸபையின் உத்தேசம்:—

தேவாங்கத்தாரின் குழந்தைகளுக்கு வித்யாதானம் செய்வது; மதவிஷயத்திலும், ஆசார வியவஹாரங்களிலும் இக்காலத்துக்கேற்றுப்போல் மாற்றிக்கொள்வது; தங்கள் தேவஸ்தான விஷயமாய்

சீர்திருத்தம்; சண்டை, வியாஜ்யம், கலகங்களுண்டானால் தங்களுக்குள்ளே நியாயம் தீர்த்துக்கொள்வதற்காக ஒரு பஞ்சாயித் ஏற்படுத்துவது. இத்தகைய ஸபைக்கு அந்த வகுப்பாரெல்லாம் மெம்பராய்ச் சேரலாமென்றும், பணம் அவசியமில்லையென்றும், மேல்விசாரணைக் கமிட்டியில் 90 மெம்பர்களிருக்கலா மென்றும் விதாயகம் செய்யப்பட்டது. Mr. நஞ்சப்ப செட்டி, Mr. N. கிரிய செட்டி, Mr. வெரிவாடசெட்டி முதலியவர்கள் செக்ரடரிகளாய் நியமனம் பெற்றனர். ஹிந்து கிருபாகரநிதி என்ற தனபிவிருத்தி பாங்கே இந்த ஸபையின்பண்டை நடத்திவரும்.

மூன்று தேவாலயங்களும், ஒரு சத்திரமும் இவர்களுக்குச் சொந்தமானவை. இதுவரை செலவு செய்து மேல்விசாரம் நடத்திவந்தார்கள். இவைகளின் செலவு, அதிகாரங்களை யாரும் கவனித்ததில்லை. ஷை ஸபையார் ஒரு கமிட்டி ஏற்படுத்தியிருக்கின்றனர். ஸபையாரின் அபிப்பிராயப்படி இனிமேல் தர்மகாரியங்களை நடத்த வேண்டும். தங்கள் மக்களுக்கு வித்தையில்லையே என்று மகா ஸபையார் வருத்தமுற்று சம்பளம் வாங்காமல் ஸ்வபாஷையைக் கற்பிக்கும்படி ஏற்பாடு செய்திருக்கின்றனர். தேவாங்கசாலா என்று பாடசாலைக்குப் பெயர். 5 வயது முதல் 12 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு வித்தை கற்பிப்பார்கள். ஒவ்வொரு பையனும் ஸ்வபாஷையோடு இங்கிலீஷ் படிக்கவேண்டும். பணம் சேர்ந்தால் ஹைஸ்கூல் ஏற்பாடாகும். ஸம்ஸ்கிருதம், தெலுங்கு பாஷைகளைக் கற்பிப்பார்கள். எல்லா குழந்தைகளும் படித்தேதீரவேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்வார்கள். இந்த ஏற்பாட்டைக் கவனிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் ஸ்கூல் கட்டுவதற்கும், ஸாமான்களை சேகரிக்கவும், உபாத்யாயர்களை நியமனம் செய்யவும் பணம் இவ்வளவாகிறதென்று கணக்கிட்டு மகாஸபைக்கு ரிப்போர்ட்டனுப்ப வேண்டும்.

தேவாங்கத்தாரில் பூர்வீக வழக்கம், ஆசாரம் வியவஹாரங்களை அனுஷ்டிக்கும்படிசெய்ய யோசிக்கிறார்கள். புதிய வியவஹாரங்களில் தலையிட்டுக் கெடுவதைப்பார்க்க வியஸனமாயிருக்கிறது. தவறாய் நடப்பவர்களை விவேகத்தால் திருத்தி உத்தம மார்க்கத்துக்குக் கொண்டுவர ஒரு கமிட்டி ஏற்பட்டிருக்கிறது? புத்தி வார்த்தையைக் கேளாமல் அவிதேயமாய் நடந்தால் மகாஸபையார் தங்களுக்குத் தோன்றும் சிக்ஷையை விதிக்கலாம். குடி கொஞ்சங் கொஞ்சமாய் தலையெடுத்திருக்கிறது. இதைக் குறைக்க வேண்டும்.

முக்யஸ்தர்களைப் பொறுக்கி ஒரு பஞ்சாயித் கூட்டினார்கள். கிரிமினல் அபராதம், ராஜத்துரோகம் செய்தவர்கள் கோர்ட்டுகளில் விசாரிக்கட்டும். மற்ற வியாஜ்யங்களை யெல்லாம் பஞ்சாயிதார் விசாரணை செய்து தீர்ப்புசொல்வார்கள். இந்த தீர்மானத்தை ஒப்புக்கொள்ளாவிடில் மகா ஸபையாருக்கு அபீல் செய்யலாம்.

நெசவுதொழிலை அபிவிருத்தி செய்வதற்காக சில வர்த்தகர்கள் ஸமர்த்தர்களான நெசவாளிகளை ஒரு கமிட்டியாய்ச் சேர்த்திருக்கின்றனர். புதிய மக்கங்களை உபயோகப்படுத்தி நெசவு கார்க்கானக்களில் வைக்க அவர்களின் அபிப்பிராயம் வரைந்துகொடுக்க வேண்டும். நூலில் சாயமேற்றுவது, பட்டை டவர்ணம், ராட்டைகளில் நூற்பது இத்யாதிகளை அபிவிருத்தி செய்வது அவசியம். வீட்டில் ஸ்திரீகள் நூல் திரிப்பது, சாயம் போடுவது, மற்றுள்ள காரியங்களைச் செய்துவரவேண்டும்.

இத்தகைய காரியங்களுக்கு திரவியம் அவசியமென்பதை எல்லோரும் அறிவார்கள். மகாஸபையார் ஒரு பண்டு ஏற்படுத்தி தங்கள் ஜனத்தாரிடம் சந்தா வசூல் செய்கின்றனர். வர்த்தகர்கள் தங்கள் லேவாதேவியில் ஆறிலொருபாகம் கொடுக்கவேண்டும். கல்யாணகாலத்தில் கன்னியை வரன்பக்கத்திலிருந்து $7\frac{1}{2}$ ரூ. வசூல் செய்யப்படும். நிர்க்கதியாயிருப்பவர்களிடம் பணம் வாங்கமாட்டார்கள். இந்தக் கிரமத்தை அதிகரிப்பவர்களுக்கு தண்டதிரவியம் விதிக்கப்படும்.

இச்சபையின் மூலதனத்துக்கு 25,000 ரூ. வேண்டியிருக்கிறதென்று கூறி மகாஸபையார் சந்தா எடுத்தார்கள். 24,975 ரூ. வசூலாயிற்று. சில பிரபுக்கள் ஏராளமாய்ப் பணவுதவிசெய்திருக்கின்றனர்.

---